# அதிகமான் நெடுமான் அஞ்சி

★

கி. வா. ஜகந்நாதன்

★

அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை சென்னை-18

அமுதம்—181
உரிமை பதிவு
முதற் பதிப்பு: நவம்பர், 1959
நான்காம் பதிப்பு: ஜூன். 1964

விலை ரூ. 1-00

*Approved by the Madras Text Book Committee for Tam*
*Non-Detailed Study for Standards VIII & IX*
*vide page 17 of Fort St. George Gazette 10—5—61*

Printed on
Double Crown White Printing Paper 10·9 kg.

நேஷனல் ஆர்ட் பிரஸ், தேனாம்பேட்டை, சென்னை-18

# முன்னுரை

தமிழ் இலக்கியங்களில் வீரமும் காதலும் இணைந்து ஒளிர்கின்றன. சங்க காலத்து நூல்களில் காதற் பாட்டுக்கள் ஐந்துபங்கும் வீரப்பாடல்கள் ஒருபங்குமாக இருக்கின்றன. காதற் பாட்டுக்கள் எல்லாம் புனைந்துரைகள்; கற்பனைக் காட்சிகளை உடையன. ஆனல் வீரப் பாடல்கள் பெரும்பாலும் வரலாற்று உண்மைகளைக் கருவாகக் கொண்டவை.

எழு பெருவள்ளல்களில் ஒருவனும் ஒளவைக்குச் சாவா மூவா நிலைதரும் நெல்லிக்கனியை வழங்கியவனுமாகிய அதிகமான் நெடுமான் அஞ்சியின் வரலாறு சுவையானது. சங்கநூற் பாடல்களைக் கொண்டு அவன் பெருமையைவடித்து வடிவம் கொடுத்து எழுதியதே இந்தப் புத்தகம். புறநானூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு ஆகிய நூல்களும், தகடூர் யாத்திரைப் பாடல்களும், கொங்குமண்டல சதகப் பாடலும் இந்த வரலாற்றையறியத் துணையாக இருந்தன. அன்றியும் அதிகமான் கோட்டையின் இரகசியத்தைச் சேரனுக்கு ஒரு வஞ்சகமகள் அறிவித்தாள் என்ற செய்தி அதிகமான் வாழ்ந்த தருமபுரிப் பக்கத்தில் கர்ணபரம்பரையாக வழங்கிவருகிறது. அதையும் பயன்படுத்திக் கொண்டேன்.

ஆராய்ச்சி முறையில் எழுதியதன்று இது. படிப்பவர்கள் நெஞ்சில் அதிகமான் உருவமும் செயல்களும் ஓவியமாக நிற்கவேண்டும் என்ற கருத்தோடு உரையாடல்களையும் வருணனைகளையும் இணைத்து எழுதினேன். ஆயினும் தலைமை யான நிகழ்ச்சிகளுக்கெல்லாம் ஆதாரங்கள் உண்டு; அவற்றை அடிக் குறிப்பிலே தந்திருக்கிறேன்.

"காந்தமலை"
சென்னை-28
13—11—59

கி. வா. ஜகந்நாதன்

## பொருள் அடக்கம்

# அதிகமான் நெடுமான் அஞ்சி

## 1. முன்னோர்கள்

தமிழ் நாட்டைப் பல மன்னர்கள் ஆண்டு வந்திருக்கிறார்கள். ஆயினும் அவர்களுக்குள்ளே மிகப் பழங்காலந் தொட்டு இடைவிடாமல் ஆண்டு வந்தவர்கள் சேர சோழ பாண்டியர்கள். இந்த மூவேந்தர்களின் பழமையை, 'படைப்புக் காலந் தொட்டே இருந்து வருபவர்கள்' என்று சொல்லிப் புலவர்கள் பாராட்டுவார்கள். தமிழ்நாடு மூன்று மண்டலங்களாகப் பிரிந்திருந்தது. சோழ மண்டலம், பாண்டிய மண்டலம், சேர மண்டலம் என்பவை அவை. அவற்றை ஆண்டுவந்த மன்னர்கள் மூவரையும் முடியுடை மூவேந்தர் என்று இலக்கியம் கூறும். அவர்களுடைய தலைமையின் கீழும், தனியேயும் பல சிறிய அரசர்கள் சிறிய சிறிய நாடுகளைத் தங்கள் ஆட்சிக்குரிமையாக்கி ஆண்டு வந்ததுண்டு; ஆனால் அவர்களுக்கு முடி அணியும் உரிமை இல்லை. பழங்கால முதல் தமிழ் நாட்டை ஆண்டு வந்த சேர சோழ பாண்டியர்களுக்கே அந்த உரிமை இருந்தது.

இந்த மூன்று மன்னர்களுக்கும் தனித்தனியே அடையாளப் பொருள்கள் இருந்தன. அவற்றில் சிறப்பானவை மாலையும் கொடியும். சேரன் பனை மாலையையும் விற்கொடியையும் உடையவன். சோழன்

ஆத்தி மாலையையும் புலிக் கொடியையும் உடையவன். பாண்டியன் வேப்ப மாலையையும் மீன் கொடியையும் உடையவன். எல்லோரும் அணிகிற மாலைகளை அணிந்து கொண்டால் தனியாக அடையாளம் தெரியாது. ஆகையால் நாட்டில் உள்ள மக்கள் வழக்க மாக அழகுக்கும் இன்பத்துக்கும் அணிந்து கொள்ளும் மலர்மாலைகளை அவர்கள் தங்கள் அடையாள மாலை யாக வைத்துக்கொள்ளவில்லை. பிறர் அணியாத மாலைகளாகத் தேர்ந்து தங்களுக்கு உரியன வாக்கிக் கொண்டார்கள். பனை மாலையையோ ஆத்தி மாலையையோ வேப்பமாலையையோ யாரும் மணத்துக் கென்றோ அழகுக்கென்றோ அணிகிறதில்லை. அவை தமிழ்நாட்டு மூவேந்தர்களுக்கு உரியனவாகப் புகழ் பெற்றவை. தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூலில் அவற்றின் பெருமையை அதன் ஆசிரியர் கூறியிருக்கிறார்.[1]

தமிழ் நாட்டின் வடக்கே உள்ள பகுதியைச் சோழ மன்னர்களும், தெற்கே உள்ள பகுதியைப் பாண்டிய அரசர்களும், மேற்கே மலைநாடு என்று வழங்கும் பகுதி யைச் சேர வேந்தர்களும் ஆண்டு வந்தார்கள். மலை நாட்டில் சேரர் பரம்பரை இன்றும் இருந்து வருகிறது. இப்போது சேரநாட்டில் மலையாள மொழி வழங்கினு லும் அக் காலத்தில் தமிழே வழங்கியது. தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகவே அந்த நாடு இருந்தது.

சேர நாட்டின் தலைநகரம் வஞ்சி. இப்போது திரு வஞ்சைக் களம் என்று வழங்கும் ஊரும் கொடுங் கோளூர் என்ற ஊரும் சுற்று வட்டாரங்களும் சேர்ந்த பெரிய நகரமாக விளங்கியது வஞ்சி. சேர அரசர் களின் அரசிருக்கை நகரமாகிய அங்கே அயல்நாட்டு வாணிகர்களும் வந்து மலைநாட்டு விளைபொருள்களை வாங்கிச் சென்றனர். அவர்கள் சரக்குகளை ஏற்றிச்

1. தொல்காப்பியம், புறத்திணையியல், 5.

செல்லுவதற்கு ஏற்றபடி முசிறி என்ற பெரிய துறை முகப் பட்டினம் அந் நாட்டில் இருந்தது. சேரர்களுடைய பெருமையை மட்டும் தனியே பாடுகிற சங்க காலத்து நூல் ஒன்று இருக்கிறது. அதற்குப் பதிற்றுப் பத்து என்று பெயர். அது பத்துச் சேர அரசர்களின் புகழைப் பத்துப் பத்துப் பாடல்களால் வெளியிடுகிறது. ஒவ்வொரு பத்தையும் ஒவ்வொரு புலவர் பாடி, சேர மன்னர் வழங்கிய பரிசைப் பெற்றனர். சேர மன்னர்களிற் சிலர் தமிழ்ப் புலமையிற் சிறந்தவர்களாக இலங்கியதுண்டு. அவர்கள் பாடிய தண்டமிழ்ப் பாடல்கள் சிலவற்றை இன்றும் நாம் படித்து இன்புறலாம்.

இவ்வாறு புகழுடன் விளங்கிய சேரர் குலத்தில் மிகப் பழைய காலத்தில் ஒரு சிறு கலாம் விளைந்தது. சேரர் குலத்து அரசுரிமையைப் பெறும் திறத்தில் சகோதரர்கள் இருவரிடையே விளைந்தது அது. ஒவ்வொருவரும் அரசுரிமை தமக்கே என்று வாதிட்டனர்; போர் புரிந்தனர். இறுதியில் ஒருவரே வென்றனர். தோல்வியுற்றவர் தம்முடைய படைப்பலத்தைக் கொண்டு சேர நாட்டை அடுத்துள்ள தகடூர் என்ற ஊரில் தங்கி, அதையே தமக்குரிய தலைநகராக ஆக்கிக்கொண்டார். கோட்டை கொத்தளங்களை அமைத்துச் சிற்றரசராக வாழலானார். சேரன் வழி வந்தவர் என்ற பெருமையை விட அவருக்கு மனம் இல்லை. ஆதலால் தமக்கும் பனைமாலையையே அடையாள மாலையாக வைத்துக் கொண்டார். அப்படி ஒரு புதிய அரசைத் தோற்றுவித்தவரின் பெயர் அதிகமான் என்பது; அதியமான், அதியன் என்றும் அவரைச் சொல்வதுண்டு. அவருக்குப் பின் தகடூரை இராசதானியாகக் கொண்டு ஆண்டவர்களை அதியன் குலத்தினர் என்றும், அதியரையர் என்றும் பெயர் சூட்டி மக்கள் வழங்கி வந்தார்கள். அவர்களுடைய ஆட்சியில் இருந்தது குதிரை என்னும் மலை. புலவர்கள் அதை

ஊராக் குதிரை என்று புகழ்ந்தார்கள். 'மக்கள் ஏறிச் செலுத்தும் குதிரை அன்று இது; இது மலை'[1] என்பதை நினைப்பூட்டி அப்படிப் பாடினார்கள்.

அதியர் குலத்தில் வந்தவர்கள் சிவபக்தி நிரம்பியவர்கள்; மற்றத் தெய்வங்களையும் வழிபட்டு வேண்டிய கடமைகளை ஆற்றுகிறவர்கள். வேள்வி செய்து தேவர்களுடைய அன்பைப் பெற்றவர்கள். சிவபிரானைப் பூசை செய்கையில் அப்பிரானுக்கு அருச்சனை செய்த வில்வத்தைப் பூசை முடிந்த பிறகு தம் தலையில் வைத்துக்கொள்வது ஒரு வழக்கம். அதியர்குல மன்னரில் தலைவர் அப்படிச் செய்தார். பூசை முடிந்து வெளியிலே வந்து வேறு செயல்களை ஆற்றும்பொழுதும் அவர் முடியில் அந்தக் கூவிளம் விளங்கியது. நாளடைவில் அதுவே அவருக்குரிய அடையாளக்கண்ணியாகிவிட்டது. மார்பிலே தம் குலப் பழமையை நினைவூட்டும் பனைமாலையையும் தலையிலே தம் சிவபக்திச் சிறப்பைக் காட்டும் கூவிளங் கண்ணியையும் அணிந்து வந்தார்.[2] பின்வந்த அரசர்களும் இந்த வழக்கத்தையே மேற்கொண்டனர்.

இந்தக் குலத்தில் வந்த ஒரு மன்னர் தம் நாட்டில் வேளாண்மையைவளப்படுத்த எண்ணினார். தகடூருக்கு அருகில் வாய்ப்பான பேராறு ஏதும் இல்லை. ஏரிகளும் குளங்களும் இருந்தன. அவற்றால் நெற்பயிர் விளைந்தது. நிலத்துக்கு நெல்லும் கரும்பும் சிறப்பை அளிப்பவை; "நிலத்துக் கணி என்ப நெல்லும் கரும்பும்" என்று ஒரு புலவர் பாடியிருக்கிறார். அக் காலத்தில் நீர்வளம் மிக்க சோழ நாட்டிலும், பாண்டி நாட்டில் சில பகுதிகளிலும் கரும்பைப் பயிர் செய்து வந்தார்கள். தம்முடைய நாட்டிலும் நெல்லைப் போலக் கரும்பையும் கொண்டு வந்து பயிராக்கி நலம் செய்ய வேண்டுமென்று அந்த மன்னர் எண்ணினார். சோழ நாட்டுக்குத் தக்கவர்களை அனுப்பி

1. புறநானூறு, 168. 2. புறநானூறு, 158.

அங்குள்ள வேளாளர்களை அழைத்துவரச் செய்தார். அவர்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து கரும்பைப் பயிர் செய்யும் முறைகளைத் தெரிந்து கொண்டார். சிறந்த கரும்புக் கரணைகளைச் சோழ நாட்டிலிருந்து கொண்டுவரச் செய்து பயிர் செய்தார். அவை நன்றாக வளர்ந்தன. அதுகாறும் காணாத புதுமையாக அதியர் நாட்டில் கருப்பந் தோட்டங்கள் ஓங்கி வளர்ந்தன. இதனை ஓர் அதிசயமாகவே மக்கள் பாராட்டினார்கள். அந்த வேந்தரை, "கரும்பு தந்த காவலர்" என்று போற்றிப் புகழ்ந்தார்கள்.[1]

இந்தக் குலத்தில் தோன்றிய மன்னர்கள் வீரத்திலும் கொடையிலும் சிறந்தவர்களாக வாழ்ந்தார்கள். கொங்கு நாட்டின் பல பகுதிகளைத் தம்முடைய ஆட்சிக்கு உட்படுத்தினார்கள். மேற்குப் பகுதியாகிய மலை நாட்டில் அவர்களுடைய அரசு பரவாவிட்டாலும் கிழக்குப் பகுதியில் அது விரிந்தது.

---

1. புறநானூறு, 99.

## 2. அதிகமானும் ஔவையாரும்

இத்தகைய சிறந்த குலத்திலே பிறந்தான் நெடுமான் அஞ்சி என்பவன். அதிகர் குலத்திலே பிறந்தவனாதலின் அவனுடைய முழுப் பெயர் அதிகமான் நெடுமான் அஞ்சி என்று வழங்கியது. அவ்வளவு நீளமாக வழங்காமல் அஞ்சி என்றும் சொல்வது உண்டு. அதிகமான், அதிகன், அதியன் என்றும் சொல்வார்கள். அதிகர் குலத்தில் தோன்றிய எல்லா மன்னர்களுக்கும் பொதுவான பெயர் அதிகமான் என்பது. ஆனாலும் அதிகமான் என்று அடையின்றிச் சொன்னால் அது நெடுமான் அஞ்சியைத்தான் குறிக்கும். இரகு குலத்தில் தோன்றிய ஒவ்வொரு மன்னனையும் இரகுநாதன் என்று சொல்லலாம். ஆனாலும் இரகுநாதன் என்றால் இராமன்தான் நினைவுக்கு வருகிறான். அவனுடைய இணையற்ற பெருமையே அதற்குக் காரணம். அதிகமான் என்ற பொதுப் பெயரும் அதைப் போலவே அஞ்சிக்கு உரியதாயிற்று. ஈடும் எடுப்பும் இல்லாதபடி பல திறத்திலும் அவன் சிறந்து விளங்கியதே அதற்குக் காரணம்.

தகடூர் என்பது இன்று சேலம் மாவட்டத்தில் தருமபுரி என்ற பெயரோடு நிலவுகிறது. அதற்குத் தெற்கே நான்கு மைல் தூரத்தில் இன்றும் அதிகமான் கோட்டை என்ற இடம் இருக்கிறது. இவை யாவும் சேர்ந்த பெரிய பரப்புள்ள இடமே பழங்காலத்தில் அதிகமான் இருந்து அரசாட்சி நடத்திய தகடூராக விளங்கியது.

அதிகமான் இளம் பருவத்திலேயே அரசாட்சியை மேற்கொண்டான். துடிதுடிப்புள்ள இளமையும் உடல் வன்மையும் உள்ளத்துறுதியும் உடையவனாக அவன் விளங்கினான். தகடூர்க் கோட்டையை விரிவுபடுத்தி

மிக்க வலிமையை உடையதாக்கினான். புதிய புதிய ஊர்களைத் தன் செங்கோலாட்சிக்குள் கொண்டுவந்தான். சிறிய சிறிய நாடுகளை வைத்துக்கொண்டு வாழ்ந்திருந்த குறுநில மன்னர்கள் கொங்கு நாட்டிலும் அதற்கு அருகிலும் இருந்தார்கள். அவர்களிற் பலர் கொடுங் கோலர்களாக இருந்தார்கள். அவர்களால் மக்களுக்கு விளைந்த தீங்கை உணர்ந்த அதிகமான் அத்தகையவர்களைப் போர்செய்து அடக்கினான். இப்படி அவன் தன்னுடைய இளமைப் பருவத்தில் ஏழு பேர்களை அடக்கி அவர் ஆண்ட இடங்களைத் தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவந்தான். அவனுக்கு முன்பும் அவன் முன்னோர்கள் ஏழு பேர்களை வென்றதுண்டு. அவர்கள் ஏந்தியிருந்த ஏழு கொடிகளையும் தம் கொடிகளாகப் பிடித்துத் தாம் பெற்ற வெற்றியைக் கொண்டாடினார்கள். அதிகமான் இப்போது தன் வலிமையினால் வேறு ஏழு பேர்களை வென்றான்.[1]

இளமையில் அரசாட்சியை மேற்கொண்டதனால் அவனுக்கு ஊக்கமும் தன் நாட்டை விரிவாக்கவேண்டும் என்னும் ஆர்வமும் இருந்தன. அதனால் ஒவ்வொரு குறுநில மன்னனாக அடக்கி வந்தான். அந்தக் காலங்களில் எப்போதும் போரைப் பற்றியே சிந்தனை செய்து வந்தான். அவனுடைய வீரத்தை மக்கள் பாராட்டினார்கள். புலவர்கள் அவனைப் பார்க்க வந்தார்கள். அவர்களிடம் பெருமதிப்பு வைத்துப் பழகினான். அதிகமான் போர் சம்பந்தமாகத் தன்னுடைய படைத் தலைவர்களுடன் சூழ்ச்சியில் ஈடுபட்டிருந்தால் அவனைப் பார்ப்பது அரிது. ஒருமை மனத்தோடு மேலே செய்ய வேண்டிய வினைவகைகளைப்பற்றி ஆராய்ந்து கொண்டிருப்பான்.

அவனுடைய வீரச் சிறப்பும், புலவர்களை ஆதரித்துப் பரிசில் தரும் கொடைப் புகழும் தமிழ் நாட்டில்

1. புறநானூறு, 99.

மெல்ல மெல்லப் பரவின. நாளடைவில் பல புலவர் கள் அவனிடம் வந்து பாடிச் சென்றனர்.

தமிழ் நாட்டுப் புலவருக்குள் பெண்பாலார் பலர் உண்டு. அவர்களில் மிக்க சிறப்பைப் பெற்றவர் ஒளவையார். அவர் நல்லவர்கள் எங்கே இருந்தாலும் சென்று கண்டு நட்புரிமை பூண்டு பாராட்டும் பண் பாளர். அவர்களுக்கு வேண்டிய நல்லுரை கூறி மேலும் நற் செயல்களைச் செய்யச் செய்யும் இயல் புடையவர்.

அவர் காதில் அதிகமானுடைய புகழ் விழுந்தது. இளையவனாக இருந்தாலும் பெருந்தன்மையும் கொடை யும் வீரமும் உடையவன் என்று புலவர்கள் பாராட்டு வதை அவர் கேட்டார். அப்படியானால் நாமும் அவனைப் போய்ப் பார்த்துவரலாம் என்று புறப்பட்டார். பல நாள் நடந்து தகடூரை அடைந்தார். அப்போது அதிகமான் யாரோ சிற்றரசன்மீது படையெடுத்துப் போர் செய்வதற்குரிய ஏற்பாடுகளைச் செய்துகொண் டிருந்தான்; அமைச்சரோடும் படைத் தலைவரோடும் தனியே இருந்து ஆலோசனை செய்துகொண்டிருந் தான். அந்தச் சமயத்தில் ஒளவையார் அங்கே போய்ச் சேர்ந்தார்.

அப் பெருமாட்டியைக் கண்ட அரண்மனை அதி காரி ஒருவர் அவரை வரவேற்று அமரச் செய்தார்; நன்னீர் அளித்து அருந்தச் சொன்னார்; "தாங்கள் யார்?" என்று கேட்டார்.

"நான் ஒளவை யென்னும் பெயரை உடைய வள்" என்று விடை வந்தது.

அதிகாரி அதைக் கேட்டவுடன் திடுக்கிட்டார். ஒளவையாரின் பெருமையைக் கேள்வி வாயிலாக நன் றாக உணர்ந்தவர் அவர். அந்தப் புலமை செறிந்த பிராட்டியின் பெருமையைத் தமிழுலகம் முழுவதுமே நன்கு அறிந்து கொண்டிருந்தது; அப்படியிருக்க அதிகமான் அரண்மனை அதிகாரி தெரிந்து கொண்

டிருந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. அவர் கையைக் குவித்து ஔவையாரைத் தொழுதார்; "ஏதேனும் சிறிது உணவு கொள்ளலாமா?" என்று கேட்டார்.

"அதிகமானைக் காண வேண்டும் என்று வந்தேன். அந்த மன்னனைக் கண்ட பிறகுதான் உணவு முதலியவற்றைக் கவனிக்கவேண்டும்; அவனைக் காண முடியும் அல்லவா?" என்றார்.

அதிகாரி தர்மசங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டார். அதிகமான் தனியாக இருந்து ஆலோசனை செய்யும்போது யாரும் அங்கே செல்லக்கூடாது. எந்த வேலையானாலும் அவனுடைய ஆலோசனை முடிந்த பிறகே சொல்ல வேண்டும். ஆனால் இப்போது வந்திருப்பவரோ, புலவர் உலகம் போற்றும் பொற்புடைய அம்மையார். அவருடைய வருகையை மன்னனுக்கு உரையாமல் இருந்தால் அவரை அவமதித்ததாகும். இத்தகைய சிக்கலான நிலையில் அகப்பட்டுத் திண்டாடினார் அதிகாரி. "இதோ மன்னர் வந்துவிடுவார்; சற்றே பொறுத்திருங்கள்" என்று சொன்னார். "புறத்தே சென்றிருக்கிறார்" என்று எளிதிலே சொல்லிவிடலாம். ஆனால் பேரறிவுடைய அந்த மூதாட்டியிடம் பொய் சொல்லும் துணிவு அதிகாரிக்கு உண்டாகவில்லை.

சிறிது நேரம் கழிந்தது. அதிகமான் வெளியே வரவில்லை. அதிகாரி புழுவாய்த் துடித்தார். "நான் வந்ததைப் போய்ச் சொல்லவில்லையா?" என்று ஔவையார் கேட்டார். அதிகாரி உள்ளே போய் வந்தார்; "வந்துவிடுவார்" என்று மீட்டும் சொன்னார். அவர் அதிகமானை அணுகவே இல்லை. பின்னும் சிறிது நேரம் பொறுத்துப் பார்த்தார் ஔவையார். அதிகாரியைச் சிறிதே சினக்குறிப்புத் தோன்றப் பார்த்தார். அதற்கு மேல் அவ்வதிகாரியால் அங்கே நிற்க முடியவில்லை; உள்ளே போய்விட்டார்.

மீட்டும் சிறிது போழ்து காத்திருந்த மூதாட்டி யாருக்குப் பொறுமை சிதைந்தது; சினம் மூண்டது; எழுந்தார். அங்கே வாயிலைக் காத்துநின்ற காவலனைப் பார்த்தார்.

"ஏ வாயில் காவலனே, வாயில் காவலனே!" என்று அழைத்தார். அவன் திரும்பிப் பார்த்தான். "இதோ நான் சொல்வதை உன்னுடைய மன்னனிடம் போய்ச் சொல்" என்று சொல்லத் தொடங்கினார். "புலவர்கள் கொடையாளிகளைத் தேடிச் சென்று தம்முடைய இன்சொல்லாகிய விதையை அவர்கள் காதில் தூவுவார்கள். தாம் நாடி வந்ததைப் பெற்றுக் கொள்வார்கள். தம்முடைய தரம் அறிந்து, வரிசையை அறிந்து, பரிசளிப்பவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்று நாடிச் செல்வார்கள். அத்தகைய பரிசிலருக்கு அடைக்காமல் திறந்திருக்கும் வாயிலைக் காக்கும் காவலனே!"

வாயில் காவலனுக்கு வியப்புத் தாங்கவில்லை. 'இவர் நம்மைப் பார்த்தல்லவா பாடுகிறார்?' என்று மகிழ்ச்சியும் உண்டாயிற்று.

"வேகமான குதிரையை நடத்தும் தலைவனாகிய அதிகமான் நெடுமான் அஞ்சி தன் பெருமையைச் சரிவர உணர்ந்து கொள்ளவில்லை போலிருக்கிறது. தன்னைத் தேடி வந்த புலவர்களை மதிப்பாக உபசரித்துப் பரிசில் வழங்குகிறவன் என்ற பெயரை அவன் பெற்றிருக்கிறான். அதைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்பதை அவன் மறந்து விட்டானோ?"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று வாயில் காவலன் ஒன்றும் தெரியாத நிலையில் கேட்டான்.

"அவன் என்னைக்கூட அறிந்து கொள்ளவில்லை போலும்! வறுமையால் வாடிப் பிச்சை கேட்க வந்தவள் என்று நினைத்தானோ?"

சிறிது நேரம் புலமைப் பிராட்டியார் சிந்தித்தார்; மறுபடியும் தொடர்ந்து பேசினர். "அறிவுடையோரும் புகழுடையோரும் ஒரு காலத்தில் தோன்றி மறைந்து போய் விடுகிறார்கள் என்பது இல்லை. உலகம் சூனியமாகப் போய் விடவில்லை. ஆதலால் இந்த இடத்தை விட்டால் எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. வளர்ந்து செறிந்த மரங்களையுடைய காட்டிலே கோடரியைக் கொண்டு புகும் தச்சனுக்கு மரத்துக்கா பஞ்சம்? உலகம் அதுபோன்றது. எந்தத் திசையிலே சென்றாலும் அங்கே எங்களுக்குச் சோறு கிடைக்கும்."

இந்தக் கருத்தை அமைத்து ஒரு பாடலை அவர் சொல்லி வாய் மூடினர்; அதிகமான் விரைவாக வந்து அங்கே நின்றான்; "வரவேண்டும்; வரவேண்டும். வந்து நெடுநேரம் ஆயிற்றுப் போலும்! இந்தப் பிழையைப் பொறுத்தருள வேண்டும். ஏதோ பாடலைப் பாடியது காதில் விழுந்ததே!" என்றான்.

"ஆமாம்; என் உள்ளத்திலே தோன்றியதைப் பாடினேன்; கேள்" என்று பாட்டைச் சொன்னார்.[1]

அதைக் கேட்டு அதிகமான் நடுங்கினான். "இனி நடத்த இருக்கும் ஒரு போர் சம்பந்தமான யோசனையில் ஈடுபட்டிருந்தேன். நீங்கள் வந்திருப்பது தெரியாது. தெரிந்திருந்தால் முன்பே வந்து பார்த்திருப்பேன். இப்போதுதான் செய்தி தெரிந்து ஓடி வந்தேன். என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்" என்று மிகவும் பணிவாகக் கூறினான். அதைக் கேட்ட மூதாட்டியாருக்கு உள்ளம் நெகிழ்ந்தது. அவன்மேல் பிழை இல்லைஎன்பதை நன்கு உணர்ந்து சினம் ஆறினர்.

அதிகமான் அவரை உள்ளே அழைத்துச் சென்றான். தக்க இருக்கையில் அமரச் செய்தான். உண்ணச் செய்தான். பின்பு மிகவும் அன்போடு பேசிக்

1. புறநானூறு 92.

கொண்டிருந்தான். "இதுவரையிலும் தங்களை நான் காணும் பேறு பெற்றிலேன். இன்று தாங்களே கருணையினால் வலிந்து வந்தீர்கள். அப்படி வந்தும் என் கடமையை உடனே செய்யாமல் இருந்து விட்டேன். இந்தப் பெரும் பிழையை இனி ஒரு நாளும் செய்யமாட்டேன். தங்களைத் தமிழ்நாடே புகழ்ந்து மதித்துப் பாராட்டுகின்றது. இவ்வளவு பெரு மதிப்புடைய அன்னையாராகிய தாங்கள் என்னை யும் ஒரு பொருளாகக் கருதி வந்ததற்கு நான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்!" என்று மனம் குழைந்து கூறினான்.

இருவரும் உரையாடினார்கள். ஔவையாரின் புலமைச் சிறப்பை ஒவ்வொரு சொல்லிலும் உணர்ந்து மகிழ்ந்தான் அதிகமான். அவனுடைய பண்பின் பெருமையைப் பேசப் பேச அறிந்து கொண்டார் ஔவையார். இரண்டு நாட்கள் புலவர் பெருமாட்டி யார் அங்கே தங்கினார்; பிறகு விடைபெற்றுப் புறப் பட்டார். அப்போது அதிகமான் மிக வருந்தினான். "நான் ஆண்டிலும் சரி; அறிவிலும் சரி, மிகவும் சிறியவன்; நீங்களோ இரண்டிலும் பெரியவர்கள். தங்களைப் போன்றவர்கள் எனக்கு வழி காட்டினால் எத்தனையோ மேன்மை உண்டாகும். இனிமேல் தாங்கள் அடிக்கடி வந்துகொண்டிருக்க வேண்டும்" என்று சொல்லிப் பல பரிசுகளை வழங்கி விடை கொடுத்தனுப்பினான்.

# 3. வீரமும் ஈகையும்

அதிகமான் விரும்பியபடியே ஔவையார் பின்னும் ஒரு முறை தகடூருக்கு வந்தார். அப்போது அதிகமான் ஏழு குறுநில மன்னர்களையும் வென்ற பெருமிதத்தோடு இருந்தான். ஔவையாரை மிகச் சிறப்பாக வரவேற்று உபசாரம் செய்தான். நெடுநேரம் அவரோடு பேசிப் பொழுது போக்கினன். தான் செய்த போர்களைப்பற்றியும் அப்போது பெற்ற அநுபவங்களையும் எடுத்துச் சொன்னன். ஔவையார் அவற்றைக் கேட்டு அவன் வீரத்தைப் பாராட்டினர். பல பாடல்களைப் பாடினர். ஒவ்வொரு பாடலையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் பாடியதைப்போல அமைத்தார். அவற்றைப் படித்தால், போர்க்களத்தில் அதிகமானுடன் இருந்து அவனுடைய வீரச் செயல்களைக் கண்டு கண்டு அவ்வப்போது பாடியவைபோலத் தோன்றும்.

பகைவர்களைப் பார்த்துச் சொல்வது போல அமைந்தது ஒரு பாட்டு.

"பகையரசர்களே, போர்க்களத்திலே புகவேண்டாம். புகுந்தால் நீங்கள் தொலைந்து போவீர்கள். எங்களிடம் ஒரு வீரன் இருக்கிருன். அவனுடைய வலிமையை எப்படி அளந்து காட்டுவது? மிகவும் கைவன்மையையுடைய தச்சன் ஒரு நாளைக்குச் சிறந்த தேர்கள் எட்டைச் செய்யும் ஆற்றலையுடையவனாக இருக்கிருன். அத்தகையவன் ஒரு மாதம் முயன்று ஒரு தேர்ச் சக்கரத்தைச் செய்தால் அது எவ்வளவு வலிவுடையதாக இருக்கும்? அத்தகைய பெரு வலிமையை உடையவன் எங்கள் அதிகமான்" என்ற பொருளைக் கொண்டது அந்தப் பாட்டு.

*களம்புகல் ஓம்புமின் தெவ்விர், போர்எதிர்ந்து*
*எம்முளும் உளன்ஒரு பொருநன் ; வைகல்*
*எண்தேர் செய்யும் தச்சன்*
*திங்கள் வலித்த கால்அன் னோனே !*[1]

[களம்–போர்க்களத்தில். புகல்–புகுதலை. ஓம்புமின்–நிறுத்தி விடுங்கள். பொருநன்–போர் செய்யும் வீரன். வைகல்–நாள் தோறும். வலித்த–எண்ணிச் செய்த.]

அதிகமானையே பார்த்துச் சொல்லும் பாட்டு ஒன்று எவ்வளவு அழகாக அவன் வீரப் பெருமையை எடுத்துச் சொல்லுகிறது! அந்தப் பாடல் முழுவதும் கேள்விகள். "மலைச்சாரலிலே உள்ள வலிமையை உடைய புலி சினம் மிகுந்தால் அதனோடு எதிர் நிற்கும் மானினம் உண்டோ?" என்பது ஒரு கேள்வி. "இல்லை" என்று தானே சொல்ல வேண்டும்? இப்படியே, இல்லை இல்லை என்று சொல்லும்படி சில கேள்விகளைக் கேட்டார் அந்த அறிவுடைப் பெருஞ் செல்வியார். "கதிரவன் சினந்தால் திசை முழுதும் செறிந்த இருள் இருக்குமோ? வண்டி மணலில் ஆழ்ந்தால் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் மணலைக் கிழித்துக்கொண்டும் பாறையை உடைத்துக்கொண்டும் சக்கரம் உருளும்படி இழுக்கும் செருக்கையுடைய காளைக்கு இதுதான் எளிய துறை, இது எளிய துறையன்று என்ற வேறுபாடு உண்டோ?" என்று வினாக்களை அடுக்கினார். பிறகு இத்தனை வினாக்களையும் அடுக்கியதற்குப் பயனாக உள்ள விடையையும் கூறினார்; "மதிற் கதவைப் பூட்டும் கணையமரம் போன்ற தோளையுடையவனே, வலிய கையை யுடையவனே, நீ போர்க்களத்தில் புகுந்துவிட்டால் உன் மண்ணைக் கைக்கொண்டு வெற்றி முழக்கம் செய்யும் ஆற்றலை

1. புறநானூறு, 87.

யுடைய வீரரும் இருக்கின்றனரா?'' என்று கேட்டார் ஔவையார்.[1] இவ்வாறு பல பாடல்களை அவர் பாடப் பாடக் கேட்டு மகிழ்ந்தான் அதிகமான்.

''உங்களுடைய பாடல்கள் என்னைப் புகழ்பவை என்ற எண்ணத்தோடு பார்த்தால் எனக்கு நாணமே எழுகிறது. ஆனால் அதை மறந்து சொற்பொருட் சுவையை நோக்கும்போது அந்தப் பாடல்களில் ஆழ்ந்து இன்புறுகிறேன். எத்தனை அருமையான பாடல்கள் !'' என்று அவன் பாராட்டினான்.

''பாட்டிலே சிறப்பு இருக்கிறதோ, இல்லையோ, உறுதியாகச் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. இந்தப் பாடல்களை நீ சுவைப்பதற்குக் காரணம் உனக்கு என்னைப்போன்ற புலவர்களிடத்தில் உள்ள பெரிய அன்புதான்.''

''என்ன, அப்படிச் சொல்கிறீர்கள்?''

''ஆம்; நான் உண்மையைத்தான் சொல்கிறேன். சின்னஞ்சிறு குழந்தைகள் மழலைச் சொல் பேசுகின்றன. அந்தப் பேச்சிலே ஏதாவது பண் ஒலிக்குமா? இல்லை. இன்ன காலத்துக்கு இன்ன பண்ணைப் பாடினால் இனிமையாக இருக்கும் என்ற வரையறை உண்டு. அப்படிப் பொழுதறிந்து வருகிற இசையா அது? அந்தச் சொற்களுக்குப் பொருள் உண்டா? ஒன்றும் இல்லை. ஆயினும் தந்தைமார்களுக்குத் தம் குழந்தைகளின் மழலைச் சொற்கள் இன்பத்தைத் தருகின்றன; அருள் சுரக்கும்படி செய்கின்றன. என்னுடைய வாய்ச் சொற்களும் அத்தகையனவே. பகைவர்களுடைய காவலையுடைய மதில்களையெல்லாம் அழித்து வென்ற பெருவீரனாகிய நீ என்னிடம் அருளுடையவனாக இருப்பதனால்தான் அவை உனக்கு இனிக்கின்றன!'' என்று ஔவையார் ஒரு பாட்டிலே சொன்னார்.[2]

---

1. புறநானூறு, 90. 2. புறநானூறு, 92.

"நன்றாகச் சொன்னீர்கள்! யார் தந்தை? யார் குழந்தை? நீங்கள் ஆண்டிலே முதிர்ந்தவர்கள்; நான் மிக இளையவன்; இன்னாரிடம் இன்னபடி பேச வேண்டும் என்பதை அறியாதவன். அப்படி இருந்தும் என்னோடு நீங்கள் பேசி அறிவுரை பகர்கிறீர்கள். உண்மையாக நீங்கள் எனக்குத் தமக்கைபோன்றவர்கள். உங்களுடைய பெருமையைத் தமிழுலகம் நன்றாக அறியும். உங்கள் அன்புக்கு ஆளாகும் பேறு எனக்குக் கிடைத்ததே என்று எண்ணி எண்ணி இன்பம் அடைந்து கொண்டிருக்கிறேன். நான் உங்களுக்குத் தம்பி போன்றவன். தம்பி என்றே எண்ணி என்னிடம் உரிமையோடு பழகவேண்டும்."

அவனுடைய பணிவும் உள்ளன்பும் ஒளவையாரைக் கவர்ந்தன. ஒளவையாரோடு பழகப் பழக அதிகமானுக்கும் செந்தமிழின்பத்தின் கூறுபாடுகள் புலனாயின. புலவர்களிடம் மதிப்பு உண்டாயிற்று. எத்தனை வீரம் உடையவனாக இருந்தாலும், கொடையை உடையவனாக இருந்தாலும் புலவருடைய அன்பைப் பெற்றால்தான் உலகம் மதிக்கும் என்ற உண்மையை உணர்ந்தான்; ஒளவையாரைத் தெய்வம்போலக் கொண்டாடினான். புலவர்களை நன்கு மதிக்கவேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் ஊன்றிப் பதிவதற்குக் காரணமான நிகழ்ச்சி ஒன்று ஒரு சமயம் நிகழ்ந்தது.



ஒளவையார் விடை பெற்றுச் சென்றபிறகு ஒரு நாள் பெருஞ்சித்திரனார் என்ற புலவர் அவனைத் தேடி வந்தார். அவர் வந்த சமயத்தில் அதிகமான் ஏதோ இன்றியமையாத வேலையில் ஈடுபட்டிருந்தான். முன்பெல்லாம் அத்தகைய செவ்வியில் யாரும் அவனை

அணுக முடியாமல் இருந்தது. ஔவையாரைக் காக்க வைத்து அதனால் அவர் சினம் கொள்ளும்படி நேர்ந்த தல்லவா ? அது முதல் புலவர்கள் வந்தால் மட்டும் இன்னார் வந்திருக்கிறார் என்று தெரிவிக்கும்படி சொல்லியிருந்தான் அதிகமான்.

ஆதலின் பெருஞ்சித்திரனாரை வழக்கம்போல எதிர்கொண்டு அழைத்து இருக்கச் செய்த அதிகாரி, அதிகமானிடம் சென்று அவர் வரவைத் தெரிவித்தார். அந்தப் புலவரை முன்பு அதிகமான் கண்டதில்லை; அவரைப்பற்றிக் கேட்டதும் இல்லை. அப்போது அவன் ஈடுபட்டிருந்தது மிகவும் முக்கியமான வேலை; ஆதலால் அதை விட்டுவிட்டுச் செல்ல மனம் வரவில்லை. புலவரைக் காத்திருக்கும்படி சொல்வதும் முறையென்று தோன்றவில்லை. ஆகையால் அவருக்குச் சில பரிசில்களைக் கொடுத்து அனுப்பும்படி அதிகாரியிடம் சொன்னான். அப்படியே அவர் ஒரு தட்டில் பழம், வெற்றிலை பாக்கு வைத்துப் பொன்னும் உடன் வைத்துப் புலவரை அணுகி அவர்முன் வைத்தார்; "மன்னர் பெருமான் மிகவும் இன்றியமையாத ஆலோசனையில் ஈடுபட்டிருக்கிறார்; தங்கள் வரவைக் கேட்டு மகிழ்ந்து இவற்றைச் சேர்ப்பிக்கச் சொன்னார்; ஆறுதலாக மீட்டும் ஒருமுறை வரும்படி சொன்னார்." என்றார்.

புலவர் பரிசில்கள் வைத்திருந்த தட்டைப் பார்த்தார்; அதிகாரியை ஏற இறங்க நோக்கினார். சிறிது நேரம் சும்மா இருந்தார்; கனைத்துக்கொண்டார். அவரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார்.

"உம்முடைய மன்னன் இதைக் கொடுத்து அனுப்பும்படி சொன்னானா? அவனுடைய புகழைக் கேட்டு அவனைக் கண்டு இன்புறவேண்டுமென்று நெடுந் தூரத்திலிருந்து நான் வருகிறேன். சிறிய குன்றுகளையும் பெரிய மலைகளையும் கடந்து வந்திருக்கிறேன். நான்

பரிசிலைப் பெற்றுக்கொண்டு செல்வதற்காகவே வந்திருக்கிறேன் என்று என்பால் அன்பு வைத்தருளி, இதைப் பெற்றுக் கொண்டு இப்படியே போகட்டும் என்று சொல்லி அனுப்பினானே; அவன் என்னை எப்படி அறிந்திருக்கிறானோ, அறியேன். என்னைக் காணாமல் வழங்கிய இந்தப் பொருளைக் கொண்டுசெல்ல நான் வாணிக நோக்கமுடைய பரிசிலன் அல்லேன். பணம் ஒன்றையே குறியாக நினைத்து நான் இங்கே வரவில்லை. மனம் மகிழ்ந்து முகம் மலர்ந்து கண்டு அளவளாவி, தரம் அறிந்து கொடுத்தனுப்புவதாக இருந்தால், அவர்கள் கொடுப்பது தினையளவாக இருந்தாலும் எனக்கு இனியது'' என்று பாட்டிலும் சொல்லிப் புலவர் புறப்பட்டுச் செல்வதற்காக எழுந்துவிட்டார்.

''நீங்கள் சினம் கொள்ளக் கூடாது. தயை செய்து அமரவேண்டும்'' என்று சொல்லி உள்ளே ஓடினார் அதிகாரி. ''நான் வாணிகப் பரிசிலன் அல்லேன்'' என்று அழுத்தந் திருத்தமாகப் புலவர் சொன்னது அவர் காதிலே புகுந்து குடைந்தது. அதை அப்படியே போய் அதிகமானிடம் சொன்னார்.

அதிகமான் உடனே எழுந்துவந்தான்; ஔவையாரைக் காக்கவைத்தது எப்படிப் பிழையோ, அப்படியே புலவரைக் காணாமல் பிச்சைக்காரர்களுக்குப் பிச்சையிடச் செய்வதுபோலப் பரிசிலை அனுப்புவதும் பிழை என்பதை உணர்ந்துகொண்டான். ''குற்றத்தைப் பொறுக்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே வந்தான்.

''நீர் கிழிய எய்த வடுப்போல மாறுமே, சீரொழுகு சான்றோர் சினம்'' என்பார்கள். அதிகமானைக் கண்டவுடன் பெருஞ்சித்திரனாருடைய சினம் மாறியது.

அதிகமான் அவரை உபசரித்துப் பேசிக்கொண்டிருந்தான். அவர் சினத்தாற் பாடிய பாடலை மறுபடி

யும் சொல்லச் சொல்லிக் கேட்டான்.[1] புலவரும் வள்ளலும் மனம் கலந்து உறவாடினார்கள். பிறகு பலபரிசில்களைத் தந்து அப்புலவர் கோமானை அனுப்பினான் தகடூர் மன்னன்.

அதன்பின்பு எந்தப் புலவர் வந்தாலும் உடனே கண்டு அகமும் முகமும் மலர்ந்து குலாவத் தொடங்கினான் அவன். அவர்களை எந்தவகையிலும் புறக்கணிக்காமல் பழக வேண்டும் என்று உறுதி பூண்டான். இதன் பயனாக அவனை நோக்கிப் பல பல புலவர்கள் வந்தார்கள்; பரிசில் பெற்றுச் சென்றார்கள். சிலருக்குப் பொன்னும் பொருளும் அளித்தான். சிலருக்குக் குதிரை கொடுத்தான். சிலருக்கு யானையை வழங்கினான். சிலருக்குத் தேரை ஈந்தான். அவனுடைய வீரத்தைத் தமிழுலகம் அறிந்ததுபோல ஈகையையும் உணர்ந்து பாராட்டியது.

---

1. குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற என்நயந் தருளி, ஈதுகொண்டு
ஈங்ஙனம் செல்க தான்என என்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்?
காணாது ஈத்த இப்பொருட்கு யானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன்; பேணித்
தினையனைத் தாயினும் இனிது, அவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.

—புறநானூறு, 208.

[பரிசில் கொண்டுசெலற்கு வந்தனென் என. நயந்து-விரும்பி. தான்-அவன் (புலவன்.) வாணிகப் பரிசிலன்-பொருள் ஒன்றையே நோக்கமாகக் கொண்ட புலவன். பேணி-பாராட்டி. தினையனைத்து-தினையவ்வளவு. துணை அளவு அறிந்து-புலமை அளவைத் தெரிந்து கொண்டு. நல்கினர் விடின்-பரிசளித்து வழியனுப்பினால்.]

# 4. அமுதக் கனி

அதிகமான் காட்டில் பல மலைகள் இருந்தன. குதிரை மலை என்பது ஒன்று. கஞ்ச மலை என்பது மற்றொன்று. இப்போது சேர்வைராயன் மலை என்று சொல்லும் மலையும் அவன் ஆட்சியில் இருந்தது. கஞ்ச மலையில் பல வகை மருந்து மரங்கள் வளர்ந்திருந்தன. மூலிகைகள் படர்ந்திருந்தன. முனிவர்களும் சித்தர்களும் அந்த மலையை நாடி வருவார்கள். சிறந்த மருத்துவர்கள் அருமையான மருந்துக்குரிய செடி கொடிகளைத் தேடி அந்தமலைக்கு வருவார்கள். வேறு இடங்களில் கிடைக்காத அரிய மருந்துச் செடிகள் அங்கே கிடைத்தன. கஞ்ச மலைச் சித்தர் என்ற அற்புத ஆற்றலுடையபெரியவர்ஒருவர் அந்த மலையில்வாழ்ந்திருந்ததாகப் பிற்காலத்தில் எழுந்த கதைகள் கூறுகின்றன.[1]

அந்த மலையில் மிகவும் அருமையான நெல்லி மரம் ஒன்று இருந்தது. தமிழ் மருத்துவத்தில் வல்ல அறிஞர்கள் அதைக் கண்டுபிடித்தார்கள். அது பல ஆண்டுகளுக்கு ஒரு முறையே காய்க்கும்; பூத்துப் பிஞ்சு விடும்; ஆனால் பிஞ்சுகளெல்லாம் உதிர்ந்துவிடும். அதன் கனியை உண்டால் நரை திரை மூப்பின்றிப் பல காலம் வாழலாம். இதனை உணர்ந்த மருத்துவர்கள் அந்த மரத்தை அழியாமல் பாதுகாக்கவேண்டுமென்று அதிகமானிடம் சொன்னார்கள். அவன் அப்படியே அந்த மரத்துக்குத் தனியே வேலி கோலித் தக்க காவலாளரையும் அமைத்தான்.

ஒருமுறை அந்த மரத்தில் பிஞ்சுகள் உண்டாயின. அது கண்டு மக்களுக்கு நாவிலே தண்ணீர் ஊறியது.

---

1. கொங்கு மண்டல சதகம், 42.

"காய் காய்த்தால் அதனைப் பெறப் பலர் முன் வருவார்கள்; அரசனுக்கு விருப்பமானவர்களுக்கே அவை கிடைக்கும்" என்று பேசிக்கொண்டார்கள். நாளாக ஆகப் பிஞ்சுகள் ஒவ்வொன்றாக உதிர்ந்து வந்தன. அதிகமான் மரத்தைச் சென்று பார்த்தான். ஒவ்வொரு நாளும் மரம் அணிகலனை இழந்துவரும் மங்கையைப் போலப் பிஞ்சுகளை உதிர்த்து வந்ததைப் பார்த்தான். யாருக்கு நல்லூழ் இருக்கிறதோ அவர்களுக்குக் கிடைக்கும் என்று எண்ணிப் போய்விட்டான். சில நாட்கள் சென்றன. சில பெரிய பிஞ்சுகளே மிஞ்சின.

நாட்கள் செல்ல, அவைகளும் உதிரலாயின. கடைசியில் ஒரே ஒரு காயே மிஞ்சியது; முதிர்ந்தது. நெல்லிக்கனி பல இருந்தால் யார் யார் உண்பது என்ற சிக்கல் உண்டாக இடம் உண்டு. ஒரே ஒரு கனிதான் நின்றது. அரசனே அதை உண்ணுவதற் குரியவன் என்று யாவரும் எண்ணினார்கள்; பெரியவர்கள் அதையே சொன்னார்கள். ஒரு நல்ல நாள் பார்த்து மன்னன் அதை உண்ண வேண்டும் என்று சான்றோர்கள் திட்டம் செய்தார்கள்.

அந்த நாள் வந்தது. மரத்திலிருந்து கனியைப் பறித்து வந்தார்கள். அதிகமான் அரண்மனையில் அவன் வழிபடும் கடவுளுக்குமுன் வைத்தார்கள். அதிகமான் பணிந்து எழுந்தான். ஓரிடத்தில் சென்று அமர்ந்தான். கனியை ஒரு பொற்கலத்தில் ஏந்தி வந்தாள் எழிலுடை மங்கை ஒருத்தி; அவன் அருகில் நின்றாள். அவன் உண்ணலாமென்று அதை எடுக்கப் போகும் சமயத்தில் ஔவையார் வந்து சேர்ந்தார். வெயிலில் நெடுந்தூரம் நடந்து வந்திருக்கிறாரென்று தோன்றியது.

அவரைக் கண்டதும் அதிகமான் எழுந்து வரவேற்றான். அவர் இப்போது அதிகமான் அரண்மனையில் உள்ள யாவருக்கும் பழக்கமாகி விட்டமையால் தடை

யில்லாமல் உள்ளே வந்துவிட்டார். அதிகமான் அவரை அமரச் சொல்லி நன்னீர் பருகச் செய்தான். ''இந்தக் கடுமையான வெயிலில் வந்தீர்களே!'' என்றான்.

''ஆம்; கடுமையான வெயில்தான். ஆனால் என்ன? இங்கே வந்தால் குளிர்ந்த சொல்லும் குளிர்ந்த நீரும் குளிர்ந்த அன்பும் கிடைக்கின்றன'' என்று சொன்னவர், அங்கே தட்டை ஏந்தி நின்ற மங்கையைப் பார்த்தார். அந்தத் தட்டில் இருந்த நெல்லிக்கனி அவர் கண்ணில் பட்டது. ''அது நெல்லிக் கனியா? வரும் வழியில் நாக்கு ஒரே வறட்சியாகி விட்டது. எங்கேயாவது நெல்லிக்காய் கிடைத்தால் உண்டு நீர் வேட்கையைப் போக்கிக் கொள்ளலாம் என்று பார்த்தேன். ஒரு நெல்லி மரங்கூட என் கண்ணில் அகப்படவில்லை'' என்றார்.

அதிகமான் உடனே சிறிதும் யோசியாமல், ''இந்தாருங்கள்; இதை உண்ணுங்கள்'' என்று சொல்லி அதை எடுத்து அவர் கையில் கொடுத்தான். அந்தப் புலவர் பெருமாட்டியார் அதை வாங்கி வாயில் போட்டு மென்றார். அதுவரையில் அவர் உண்ட நெல்லிக் கனிகளைப் போல இருக்கவில்லை அது. தனியான இன்சுவை உடையதாக இருந்தது. ''இது என்ன, அதிசயக் கனியாக இருக்கிறதே! இத்தகைய சுவையையுடைய கனியை நான்கண்டதே இல்லையே!'' என்று வியந்தார் அவர்.

அங்கே இருந்த சில முதியவர்களும் பிறரும் இந்த நிகழ்ச்சியைப் பார்த்துக் கலக்கமும் கோபமும் கொண்டார்கள். 'இந்தச் சமயத்தில் இந்தக் கிழம் இங்கே எங்கே வந்தது?' என்று சிலர் பொருமினார்கள். 'இந்த அரசர் உண்மையைச் சொல்லக் கூடாதோ? திடீரென்று எடுத்துக் கொடுத்து விட்டாரே!' என்று சிணுங்கினர் சிலர். 'இதுதான் கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டவில்லை என்று சொல்வதோ!'

என்று இரங்கினார் சிலர். "இது அதிசயக் கனியாக இருக்கிறதே!" என்று ஔவை சொன்னதும் அங் கிருந்த முதியவர் ஒருவர், "ஆம், அதிசயக் கனிதான். அரசர் உண்ணுவதற்காகப் பாதுகாத்த கனி. இதை உண்டவர்கள் நரை திரை மூப்பின்றி நீடுழி வாழ் வார்கள்" என்று கூறினர். அவர் பேச்சில் சிறிது சினமும் அடங்கி ஒலித்தது.

"என்ன! நரை திரை மூப்பை நீக்குவதா?"

"ஆம்; கஞ்ச மலையில் உள்ள அருமையான மரத் தில் பல ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் இந்த அற் புதக் கனி உண்டாகும். இந்த முறை இந்த ஒன்று தான் கிடைத்தது. இதை மன்னர்பிரான் உண்ண வேண்டும் என்று எல்லோரும் ஆசைப்பட்டோம். ஆனல்—"

"அடடா! நான் குறுக்கே வந்தேனே? என்ன காரியம் செய்து விட்டேன்!" என்று வருந்தினர் ஔவையார்.

"எல்லாம் இறைவன் திருவருள். அதை உண் ணும் தவம் உங்களிடந்தான் இருக்கிறது" என்று அதிகமான் சொல்லிக்கொண்டிருந்தபோதே, இடை மறித்து, "நீ உண்டால் நீடுழி வாழ்ந்து நாட்டி லுள்ள மக்களுக்கெல்லாம் நலம் செய்வாய்; நான் உண்டு பயன் என்ன?" என்றார்.

"எங்களைப் போன்ற மன்னர்கள் உண்டு வாழ்வ தனல் உலகத்திற்கு ஒன்றும் பெரிய நன்மை உண் டாகப் போவதில்லை. போர்தான் விளையும். அரசர் களுக்குப் பிறர் நாடு கொள்வதும், அதற்காகப் போர் செய்வதும், அதன் பொருட்டுப் படைகளைத் தொகுப் பதுமே வேலை ஆகிவிட்டன. நான் என் அநுபவத்தில் இதை உணர்ந்திருக்கிறேன். எத்தனையோ முறை போர் சம்பந்தமாக ஆலோசனையில் ஈடுபட்டுப் புலவர் களைப் புறக்கணித்திருக்கிறேன்."

"அது மன்னர்களின் கடமை."

"எது கடமை? புலவர்களைப் புறக்கணிப்பதா? போருக்கு ஆயத்தம் செய்வதா?"

"வீரத்தை வெளியிடுவது மன்னர்களின் புகழை வளர்க்கும் செயல் அல்லவா?"

"அதற்காக எத்தனை காலம் வீணாகிறது? அவர்கள் போர் செய்வதனால் புகழ் வளர்வதில்லை. உங்களைப் போன்ற புலவர்கள் வாழ்த்திப் பாராட்டுவதனால்தான் புகழ் வளர்கிறது. புலவர்கள் தம்முடைய அரிய கவிகளால் பிறரை வாழவைக்கிறார்கள்; தாங்களும் வாழ்கிறார்கள். அறிவின் பிழம்பாக விளங்கும் நீங்கள் இந்தக் கனியை உண்டதுதான் முறை. நீங்கள் வாழ, உலகம் வாழும். இறைவன் நானும் உண்ணவேண்டும் என்று திருவுள்ளம் கொண்டானானால் மரம் இருக்கிறது; கனி இன்னும் விளையலாம்."

"இத்தகைய கொடையாளியை நான் எங்கும் கண்டதில்லை. நீ நீடூழி வாழவேண்டும். சாவைத் தரும் நஞ்சை உண்டும் சாவாமல் யாவருக்கும் அருள் செய்து விளங்கும் நீலகண்டப் பெருமானைப் போலப் பல்லாண்டு பல்லாண்டு வாழவேண்டும்!" என்று மனம் உருகி வாழ்த்தினார் ஔவையார். உணர்ச்சி மிக்க நிலையில் அந்தப் பெருமாட்டியார் தம் கருத்தை அமைத்து ஓர் அரிய பாடலைப் பாடினார்.

"வெற்றியை உண்டாக்கி வெட்ட வேண்டியதைத் தப்பாமல் வெட்டும் வாளை எடுத்துப் பகைவர்களைப் போர்க்களத்திலே அழியும்படி வென்றவனே, கழலுகின்ற வீர வளையைப் பெரிய கையிலே அணிந்தவனே, எப்போதும் ஆரவாரத்தோடு இனிய குடிநீர்களைப் பிறருடன் உண்டு மகிழும் அதியர் கோமானே, போரில் வஞ்சியாமல் எதிர் நின்று கொல்லும் வீரத் திருவையும் பொன்னாலான மாலையையும் உடைய அஞ்சியே, பால் போன்ற பிறையை மேலே அணிந்த முன்தலையையும் நீல மணிபோன்ற திருக்கழுத்தையும் உடைய

சிவபெருமானைப் போல, பெருமானே, நீ நிலைத்து வாழ்வாயாக! மிகப் பழையதாக நிற்கும் நிலையை உடைய மலைப்பக்கத்துப் பிளப்பிலே தோன்றிய மரத்தில் விளையப் பெற்ற சிறிய இலையையுடைய நெல்லியின் இனியகனியை, இதனால் வரும் நன்மையை நாம் இழத்தல் கூடாது என்று எண்ணாமல், அதன் பெருமையை எனக்கு வெளியிடாமல் அடக்கிக்கொண்டு, சாவு நீங்கும்படி எனக்குத் தந்தாயே! இப்படி யாரால் செய்யமுடியும்?'' என்ற பொருளோடு அந்தப் பாட்டுப் பிறந்தது.

*வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்*
*களம்படக் கொன்ற கழல்தொடித் தடக்கை*
*ஆர்கலி நறவின் அதியர் கோமான்,*
*போர்அடு திருவின் பொலந்தார் அஞ்சி,*
*பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி*
*நீல மணிமிடற்று ஒருவன் போல*
*மன்னுக பெரும நீயே! தொல் நிலைப்*
*பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட*
*சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது*
*ஆதல் நின் அகத்து அடக்கிச்*
*சாதல் நீங்க எமக்கீத் தனையே!*[1]

[வலம்-வெற்றி. வாய்-வாய்த்த; குறியைத் தப்பாமல் வெட்டிய. ஒன்னார்-பகைவர். களம்பட-போர்க் களத்தில் அழியும்படி. தொடி-வளை. ஆர்கலி-ஆரவாரம். நறவு-கள் முதலிய குடிவகை. போர் அடு-போரிலே எதிர்த்தோரை வஞ்சியாமல் எதிர்நின்று கொல்லும். திரு-செல்வம்; இங்கே வீரத்திரு. பொலந்தார்-பொன்னரி மாலை. புரை-ஒத்த. நுதல் பொலிந்த சென்னி-நெற்றியோடு விளங்கும் தலை; என்றது முன் தலையை. நீலமணி மிடறு-நீலமணி போன்ற நிறமுள்ள கழுத்து. விடரகம்-பிளப்புள்ள இடம். தரு-மரம். ஆதல்-நன்மை. அடக்கி-சொல்லாமல் மறைத்து.]

அதுமுதல் ஔவையாருக்கு அதிகமானிடத்தில் அளவிறந்த மதிப்பும் அன்பும் பெருகின. நரை திரை மூப்பைப் போக்கும் கனியைத் தனக்கென்று வைத்

---

1. புறநானூறு, 93.

துக் கொள்ளாமல் ஔவையாருக்கு ஈந்த இந்த நிகழ்ச்சியைப் புலவர்கள் அறிந்து பாராட்டினார்கள். மன்னர்கள் அறிந்து மனம் நெகிழ்ந்தார்கள். தமிழுலகமே அறிந்து வியந்தது. அதிகமானை, "அமுதம் போன்ற கனியை ஔவைக்கு ஈந்தவன்" என்று குறித்து மக்கள் புகழ்ந்தார்கள். நெல்லியைப் பற்றிய பேச்சு வரும் இடங்களிலெல்லாம் அதிகமானு டைய பேச்சும் தொடர்ந்து வந்தது. பிற்காலத்திலும் அதிகமானை உலகம் நினைவு கூர்ந்து வருகிறதற்குக் காரணம் அவனுடைய வீரம் அன்று; அவனுடைய ஆட்சித் திறமையன்று; பிற வகையான கொடை களும் அன்று; அமிழ்து விளை தீங்கனியை ஔவை யாருக்கு ஈந்த மாபெருஞ் செயலே.

பல பல வள்ளல்கள் தமிழ் நாட்டில் வாழ்ந் திருந்தாலும் மிக வியக்கத்தக்கபடி கொடைத் திறத்தில் சிறந்து நின்ற ஏழு பேரை மட்டும் சிறப் பாகச் சேர்த்துச் சொல்வது புலவர்களின் வழக்கமாகி விட்டது. ஏழு பெரு வள்ளல்களாகிய அவர்களைச் சிலர் கடையெழு வள்ளல்கள் என்பார்கள். வேறு இரண்டு வரிசை வள்ளல்களை முதலெழு வள்ளல்கள், இடையெழு வள்ளல்கள் என்று கணக்குப் பண்ணி இவர்களைக் கடையெழு வள்ளல்கள் என்று அவர்கள் சொன்னார்கள். அந்தப் பதினான்கு பேர்களும் இதிகாசங்களிலும் புராணங்களிலும் வருகிறவர்கள்; பல நாடுகளில் இருந்தவர்கள். இந்த ஏழு பேர் களே வரலாற்றோடு தொடர்புடையவர்கள்; தமிழ் நாட்டிலே வாழ்ந்தவர்கள்.

ஏழு பெரு வள்ளல்களிலே ஒருவனாக எண் ணிப் பாராட்டும் பெருமையை அதிகமான் பெற் றான். முதியவர்கள் கூடத் தாம் நீண்ட காலம் வாழவேண்டுமென்று காயகற்பம் உண்பார்கள்; சாமியார்களையும் சித்த வைத்தியர்களையும் தேடி மருந்து கேட்டு உண்பார்கள். அத்தகைய

உலகத்தில் எங்கும் பெறுவதற்கு அரியதும், உண்டாரை மூப்பு வாராமல் நீண்ட நாள் வாழச்செய்வதுமாகிய நெல்லிக் கனியைத் தன் நலம் பாராமல் ஔவையாருக்கு ஈந்த அரும்பெருஞ் செயல் காரணமாகவே அந்தப் பெருமை அவனுக்குக் கிடைத்தது.

அதிகமான் காலத்துக்குப் பிறகு வாழ்ந்த நல்லூர் நத்தத்தனார் என்ற புலவர் எழு பெரு வள்ளல்களைச் சேர்த்துச் சிறுபாணாற்றுப்படை என்ற நூலில் சொல்லியிருக்கிறார். அங்கே அதிகமானைச் சொல்லும்பொழுது.

*......மால்வரைக்*
*கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி*
*அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த*
*உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்*
*அரவக் கடல்தானை அதிகன்*[1]

என்று பாடியிருக்கிறார். அதில் இந்த வியத்தகு செயலைக் குறிப்பிட்டிருக்கிறார். இப்படியே, அதிகமானுடைய பலவகைச் சிறப்புக்களில் இந்த வண்மைச் செயலே சிறப்பாகப் புலப்படும்படி புலவர்கள் அவன் காலத்தும் பிற்காலத்தும் பல பாடல்களைப் பாடினார்கள்.

சாவாமல் செய்யும் நெல்லிக்கனியை அவன் உண்ணாமல் வழங்கி விட்டாலும், அந்த இணையற்ற ஈகையே அதிகமானை இறவாமல் தமிழ் இலக்கிய உலகத்திலும் சான்றோர்கள் உள்ளத்திலும் நிலவும்படி செய்துவிட்டது.

---

1. பெரிய மலையின் மணக்கின்ற மலர்களையுடைய பக்கத்திலே, வளர்ந்து அழகு பெற்ற நெல்லி மரத்தில், சுவையாலும் சாவை நீக்குவதாலும் அமிழ்தத்தின் தன்மை விளைந்த இனிய கனியை ஔவையாருக்குத் தந்த, வலிமையையுடைய சினம் கனலுகின்ற ஒளி விளங்கும் நீண்ட வேலையும், ஆரவாரம் செய்யும் கடலைப்போலப் பரந்த சேனையையும் உடைய அதிகமான். மால்வரை-பெரிய மலை. கவினிய-அழகுபெற்ற. உரவு-வலிமை. அரவம்-ஆரவாரம்; பேரோசை. தானை-சேனை.

# 5. படர்ந்த புகழ்

அதிகமானுடைய வீரத்தைப் பாடிய ஔவையார் அவனுடைய ஈகையையும் வெவ்வேறு வகையில் அழகாக விரித்துப் பாடினர். அவனை எத்தனை பாராட்டினாலும் அவருடைய நாத்தினவு தீரவில்லை.

ஒரு புலவன் அதிகமானை நோக்கி வருவான். தன் சுற்றத்தாரையும் அழைத்துக்கொண்டு வருவான். அவனையும் அவர்களையும் வரவேற்று உபசரிப்பான் அதிகமான். அவர்களுக்கு இனிய விருந்தளித்து மகிழ்வான். பல நாட்கள் தன்னுடனே இருந்து தனக்குத் தமிழ் விருந்து அளிக்க வேண்டுமென்று சொல்வான். அவர்களுக்குப் பலவகைப் பரிசில்களை வழங்கி, அவர்களைப் பிரிய மனம் இல்லாமல் விடை கொடுத்து அனுப்புவான். அப்புலவன் மீட்டும் வந்தால், "முன்பே வந்தவன்தானே?" என்று புறக்கணிக்கமாட்டான். பலமுறை வந்தாலும் அன்பில் சிறிதும் குறையாமல் பழகுவான். எத்தனை பேருடன் வந்தாலும் மனமுவந்து குலாவுவான். இந்தப் பண்புகளை ஔவையார் எடுத்துரைத்தார்.

*ஒருநாள் செல்லலம்; இருநாள் செல்லலம்;*
*பல்நாள் பயின்று பலரொடு செல்லினும்*
*தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ!*[1]

[செல்லலம்-நாம் செல்லவில்லை. தலைநாள் போன்ற-முதல் நாளில் காட்டியதைப் போன்ற.]

தமிழ் நூல்கள் படிக்கப் படிக்கப் புதுமைச் சுவை உடையனவாகத் தோன்றும் என்று புலவர்கள் கூறுவார்கள். தமிழ்ப் புலவர்களோடு பழகப் பழக அவர்கள்

1. புறநானூறு, 101.

புதிய புதிய தமிழ்ச் சுவையையும் அறிவையும் தனக்கு ஊட்டுவதாக எண்ணினான் அதிகமான். அதனால் அவர்கள் எப்போது வந்தாலும் தலைநாளில் காட்டிய அன்பிலே சிறிதும் குறைவின்றிக் காட்டி வந்தான்.

> "நவில்தொறும் நூல்நயம் போலும், பயில்தொறும்
> பண்புடை யாளர் தொடர்பு"[1]

என்பதை நன்கு உணர்ந்தவனாகி ஒழுகினான் அப் பெரு வள்ளல்.

அதிகமானைக் கண்டு பரிசிலைப் பெற்று உடனே தம் ஊரை அடைய வேண்டும் என்று சில புலவர்கள் வருவார்கள். அதிகமானோ அவர்களை எளிதில் விட மாட்டான்; சில காலம் தங்கிப் போகவேண்டும் என்று வற்புறுத்துவான். தமக்கு நாள்தோறும் உபசாரமும் இனிய விருந்தும் கிடைக்க, அரச குமரரைப்போல அவர்கள் இன்புற்றுத் தங்கினாலும், அவர்களுடைய உள்ளம் தாம் விட்டு வந்த வீட்டைச் சிலகால் நினைக்கும். தம் மனைவி மக்கள் அங்கே போதிய உணவில்லாமல் துன்புறுவதை எண்ணித் தனியே அவர்கள் பெருமூச்சுவிடுவார்கள். 'பரிசில்கிடைக்குமோ,கிடைக்காதோ! இப்படியே விருந்துண்ணச் செய்துவிட்டுப் போய் வாருங்கள் என்று சொல்லிவிட்டால் என் செய்வது?' என்று கூடச் சிலர் தம் மனத்துக்குள்ளே வருந்துவதுண்டு. அவர்களுக்கு அதிகமானது இயல்பை வெளிப்படுத்துவதுபோலப் பாடலை அமைத்தார் ஔவையார். 'அதிகமான் வழங்கும் பரிசிலைப் பெறுவதற்குரிய காலம் நீண்டாலும், நீளாவிட்டாலும் அது உறுதியாகக் கிடைக்கும். யானை கரும்பை வாங்கித் தன் கொம்புகளினிடையே வைத்துக் கொள்கிறது. அடுத்த கணம் அதை வாய்க்குள் செலுத்துகிறது. கொம்பிலே வைத்தது எப்படி அந்த யானைக்கு உணவாவது நிச்சயமோ,

1. திருக்குறள், 783.

அதுபோலஅதிகமானை அணுகினவர்கள் பரிசில் பெறுவதும் நிச்சயம். இங்கே வந்தவர்களுக்கு அவன் தரும் கொடைப் பொருள் அவர்கள் கையில் இருப்பது போன்றதுதான். ஆகவே, அவன் தரும் பொருளை நுகரவேண்டுமென்று ஆவலுடன் உள்ள நெஞ்சமே, நீ வருந்தாதே! அவனுடைய நன் முயற்சிகள் ஓங்கி வாழட்டும்!' என்று தமக்குத்தாமே சொல்லிக் கொள்ளும் வகையில் அந்தச் செய்யுளைப் பாடினார்.

*அணிபூண் அணிந்த யானை இயல்தேர்*
*அதியமான் பரிசில் பெறூஉம் காலம்*
*நீட்டினும் நீட்டா தாயினும், யானைதன்*
*கோட்டிடை வைத்த கவளம் போலக்*
*கையகத் ததுஅது பொய்யா காதே;*
*அருந்தே மாந்த நெஞ்சம்,*
*வருந்த வேண்டா! வாழ்கவன் தாளே.*[1]

[யானையையும் இயலுகின்ற தேரையும் உடைய அதியமான்; இயலுதல்-ஓடுதல். நீட்டினும்-தாமதமானாலும். அருந்தேமாந்த-அருந்த ஏமாந்த; பரிசில் பொருளைப்பெற்று நுகரவேண்டும் என்று எண்ணி ஏங்கி நின்ற. நெஞ்சம்-நெஞ்சமே. தாள்-முயற்சி.]

யாழ் முதலிய கருவிகளால் இசை எழுப்பியும் தாமே பாடியும் இசையை வளர்க்கும் கலைஞர்கள் பாணர்கள். அவர்களுடைய மனைவியர் ஆடுவார்கள்; பாடுவார்கள். அவர்களை விறலியர் என்று கூறுவர். பாணரும் விறலியரும் எப்போதும் நாடு முழுவதும் சுற்றிக்கொண்டே இருப்பார்கள். அங்கங்கே உள்ள செல்வர்களை அணுகித் தம் கலைத் திறமையைக் காட்டிப் பரிசு பெறுவார்கள். எங்கே கொடையிற் சிறந்தவர்கள் இருக்கிறார்கள் என்று நாடிச் செல்வார்கள்.

---

1. புறநானூறு, 101

ஒரு கொடையாளியிடம் பரிசில் பெற்ற பாணன் வேறு ஒரு பாணனைச் சந்தித்தால், தான் பெற்ற இன்பத்தை அவனும் பெறட்டும் என்று எண்ணி, அந்தக் கொடையாளியின் சிறப்பை அவனுக்கு எடுத்துரைப்பான்; அவன் இருக்கும் இடத்துக்குப் போக வழி இன்னது என்று கூறுவான். இப்படி வழி காட்டுவதாகப் புலவர்கள் பாடல்கள் பாடி வள்ளல்களை வாழ்த்துவார்கள். அந்த வகையில் அமைந்த பாடலை ஆற்றுப்படை என்று சொல்வர். ஒரு புலவன் வேறொரு புலவனிடம் தனக்குப் பரிசில் வழங்கிய வள்ளலிடம் செல்ல வழி காட்டுவதானால் அதற்குப் புலவராற்றுப்படை என்று பெயர் அமையும். கூத்துக்கலையில் வல்லவனுக்கு மற்றொரு கூத்தன் சொன்னால் அது கூத்தராற்றுப்படை என்ற பெயர் பெறும். அப்படியே பாணனைப் பார்த்துச் சொல்வதைப் பாணாற்றுப்படையென்றும், விறலிக்கு வழி காட்டுவதை விறலியாற்றுப்படையென்றும் பெயரிட்டு வழங்குவர். நேரே ஒருவனுடைய புகழைச் சொல்வதைவிட இப்படி ஆற்றுப்படை உருவத்தில் பாடுவது சுவையாக இருக்கும்.

ஒளவையார் அதிகமான் புகழை விறலியாற்றுப் படை யுருவில் அமைத்துப் பாடினார். அந்தப் பாட்டில் அதிகமானுடைய வீரத்தையும் கொடை இயல்பையும் இணைத்துப் பாடினார். அந்தக் கற்பனையைச் சற்றே பார்ப்போம்.

ஒரு விறலி தன்னுடைய சுற்றத்தாருடன் தன் வறுமையைத் தீர்க்கின்ற செல்வர் எங்கே இருக்கிறார் என்று தேடிக்கொண்டு மலையும், குன்றும், நடக்க அரிய பொட்டல் காடுமாகப் போய்க்கொண்டிருக்கிறாள். உடன் வருகிறவர்கள் அவள் ஆடினாலும் பாடினாலும் வாசிப்பதற்குரிய இசைக் கருவிகளைக் கொண்டு வருகிறார்கள்; அவற்றை மூட்டையாகக் கட்டிச் சுமந்து வருகிறார்கள். அவள் கையில் வாய்

அகன்ற வாயாய் இருக்கிறது. சோறு வாங்கிச் சாப்பிட வைத்திருப்பது அது. அதைக் கவிழ்த்து வைத்திருக்கிருள். அதை நிமிர்த்திப் பிடிக்க யாரும் ஒன்றும் கொடுக்கவில்லை.

வழியில் இளைப்புற்று அவள் உட்கார்ந்திருக்கிருள். அப்போது அவளை மற்ருெரு விறலி சந்திக்கிருள். இசைக் கருவிகளைக் கொண்டு அவள் விறலியென்று வந்தவள் தெரிந்து கொள்கிருள்.

"ஏன் இங்கே அமர்ந்திருக்கிருய்?" என்று கேட்கிருள் வந்த விறலி.

"இவ்வளவு நேரம் நடந்து நடந்து சலித்துப் போனேன்; இங்கே உட்கார்ந்தேன். என்னுடைய பாத்திரத்தை நெடுநாளாகக் கவிழ்த்திருக்கிறேன்; அதை நிமிர்த்த யாரையும் காண முடியவில்லை" என்று அயர்ச்சியுடன் விடை கூறுகிருள் ஏழை விறலி.

"அடடா! உன் வறுமையைப் போக்கும் பெருமான் ஒருவன் இருக்கிருன். அவனிடம் போ. அவனும் நெடுந்தூரத்தில் இல்லை. அருகில்தான் இருக்கிருன். இப்போதுதான் நல்ல சமயம். போனல் நிறையப் பொருளும் பொன்னும் கிடைக்கும்."

"யார் அவன்? எங்கே இருக்கிருன்?"

"அவன் பெயர் அதிகமான் நெடுமான் அஞ்சி. அவன் தன் பகைவர்களோடு போரிட்டு அவர்களை அழித்து அவர்கள் ஊரைச் சுட்டு எரித்துவிட்டான். அப்படி எரிந்தபுகை அவனுடைய யானைகளைச் சுற்றித் தவழ்கிறது. அதைப் பார்த்தால் குன்றைச் சூழ்ந்த மஞ்சுபோலத் தோன்றும். பல வேல் வீரர்களுக்குத் தலைவனாகிய அஞ்சி போரிலே முகந்துகொண்ட பொருள்களோடு தன் நகரை அடைந்துவிடுவான். அதற்குள் நீ அவனிடம் போய்ச் சேர். அவனால் உன் வறுமை தீரும்."

"அவன் வெற்றிப் பெருமிதத்தோடு இருக்கும் போது என்னைக் கவனிப்பானா?"

"இப்போதுதான் நன்றாகக் கவனிப்பான். இப்போது என்ன? உலகமெல்லாம் பஞ்சம் வந்துவிட்டாலும் அவன் தன்னை அடைந்தாரைப் பாதுகாப்பான். உன் பாத்திரமாகிய மண்டையை நிமிர்க்க வழி யில்லை என்றல்லவா வருந்துகிறாய்? அங்கே போனால் அதைக் கவிழ்க்கவே முடியாது. பலவகை உணவுகளைக் கொடுத்துப் பாத்திரத்தில் அடை அடையாக உணவு ஈரத்துடன் படியும்படி செய்வான்."

"அப்படியா! அப்படியும் ஒருவன் இருக்கிறானா?"

"இருக்கிறான் அம்மா, இருக்கிறான். உடனேபோ. அவன் கொடையை அறிவாய். அவன் வாழட்டும்! அவன் முயற்சி ஓங்கட்டும்!" என்று வந்த புதியவள் வாழ்த்தினாள்.

இப்படி அதிகமானுடைய பகையை ஒழிக்கும் வீரத்தையும், உலகில் வறிய பஞ்சம் வந்தாலும் தன்பால் வந்தவர்களைப் போற்றிக் காக்கும் பண்பையும் ஓர் அழகிய கதையாக, இனிய காட்சியாக, கற்பனை செய்து காட்டினார் ஔவையார்[1].

வேறு ஒரு கற்பனைக் காட்சியிலும் அதிகமானுடைய ஈகையையும் வீரத்தையும் இணைத்தார் அப் பெருமாட்டியார். அந்தப் பாட்டு, ஒரு தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே நிகழும் காதல் நிகழ்ச்சிகளைச்சொல்லும் அகப்பொருள் வகையைச் சேர்ந்தது.

ஓர் ஆடவன் தன் மனைவியை விட்டுச் சில நாள் பிரிந்து பொதுமகள் ஒருத்தியின் தொடர்பு உடையவனாக இருந்தான். அதனால் அவன் மனைவி மிகவும் வாடினாள். அவன் மீண்டும் வந்தான். தன் கணவன் என்ன தீங்கு செய்தாலும் பொறுத்துக்கொண்டு அவ

1. புறநானூறு, 103.

னுடன் வெறுப்பின்றி வாழும் கற்புடைய மகளாதலின் அவனை அவள் வெறுக்கவில்லை. இதை அவளுடைய தோழி கண்டாள். தீய ஒழுக்கத்தையுடைய ஆடவனிடம் கோபத்தைக் காட்டினால்தான் அவன் திருந்துவான் என்பது அத் தோழியின் எண்ணம். ஆனால் அந்தப் பெண் மணியோ சிறிதும் வருத்தத்தையோ வெறுப்பையோ காட்டாமல் அவனை ஏற்றுக்கொள்ளத் துணிந்துவிட்டாள். இதை அறிந்த தோழி அந்த மங்கை நல்லாளைப் பார்த்து, "ஒன்றோடு ஒன்று பிணங்கிச்சிக்கலாகப்பிரம்புகள் குளத்தில் வளர்ந்திருக்கின்றன. அவற்றில் கனிகள் பழுத்திருக்கின்றன; வளைந்து தொங்குகின்றன. ஆழமான நீரை யுடைய குளத்திலுள்ள மீன்கள் அந்தப் பிரப்பம் பழங்களைக் கவ்வுகின்றன. இந்தக் காட்சியை உடைய துறைகள் பல இந்த ஊரில் உண்டு. இத்தகைய ஊரிலுள்ள தலைவனுக்கு எதிர் பேசாது அவன் செய்யும் கொடுமைகளுக்கெல்லாம் உட்பட்டுப் பொறுத்து, அவனை ஏற்றுக்கொள்ளும் கற்பிற் சிறந்த பெண்டாட்டியாக நீ இருக்கிறாய். இப்படியே இருந்து கொண்டிருந்தால் என்ன ஆகும் தெரியுமா? அவன் தன் போக்கிலே போவதை நிறுத்தமாட்டான். இதை நீ தெரிந்து கொள்ளாமல் நல்ல பெண்டாட்டியாகவே இருந்தால், எனக்கென்ன? உன் நெஞ்சிலே உண்டாகும் துயரம் பலவாகட்டும்! நீ உன் அவல நிலையை எண்ணி எண்ணித் தூக்கம் வராமல் கிடப்பாயாக! நீ தூங்குகிற நாட்கள் சிலவாக இருக்கட்டும்!" என்று சொன்னாள். அவள் சொல்வதாகப் பாட்டு அமைந்திருக்கிறது.

அந்தப் பாட்டில் அதிகமானுடைய ஈகையையும் வீரத்தையும்ஔவையார்எப்படி இணைத்தார்தெரியுமா? "நீ தூங்குகிற நாட்கள் சிலவே ஆக இருக்கட்டும்" என்னும் போது, ஓர் உவமை கூறுகிறாள் தோழி.

"எப்போதும் நிறுத்தாமல் கொடுக்கும் மழை போன்ற வள்ளன்மையையுடையகையையும்,விரைந்துசெல்லும் ஆண் யானைகளையும், உயர்ந்த தேரையும் உடைய நெடுமான் அஞ்சி, பகைவரை அழிக்கும் போர்க் களத்துக்கருகில் உள்ள ஊர்க்காரர்கள், பல நாள் கவலையோடு விழித்திருந்து சில நாளே தூங்குவார் கள்; அப்படி நீ தூங்கும் நாட்கள் சிலவாகவே அமைக" என்று அதிகமானுடைய ஈகையையும் வீரத் தையும் இணைத்துச் சொல்கிறது அந்தப் பாட்டு.

*அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி*
*குண்டுநீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்*
*தண்டுறை ஊரன் பெண்டினை ஆயின்*
*பலவா குகநின் நெஞ்சிற் படரே!*
*ஓவாது ஈயும் மாரி வண்கைக்*
*கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி*
*கொன்முனை இரவூர் போலச்*
*சிலவா குகநீ துஞ்சும் நாளே![1]*

[அரில்-ஒன்றோடு ஒன்று சிக்கிப் பிணைந்த பிணைப்பு. பவர்-கொடி. வரிப்புறம் - கோட்டையுடைய வெளிப்பக்கம். குண்டு - ஆழம். இலஞ்சி - குளம். கதூஉம் - கவ்வும். பெண்டினை - அடங்கிய மனைவியாக இருப்பவள். படர் - துயரம். மாரி வண்கை - மழைபோன்ற வள்ளன்மையை யுடைய கை. கடும் பகட்டு யானை - வேகமாகச் செல்லும் ஆண் யானை. கொல் முனை - பகைவரைக் கொல்லும் போர்க்களம். இரவு ஊர் போல - இரவையுடைய ஊர்க்காரர்களைப் போல. துஞ்சும் - உறங்கும்.]

இவ்வாறு அதிகமான் நெடுமான் அஞ்சியின் பல வகைப் புகழ் ஔவையாரென்னும் புலமைப் பெருஞ் செல்வியாருடைய பாட்டாகிய கொழுகொம்பில் ஏறித் தமிழுலகம் எங்கும் பரவிப் படர்ந்து மலர்ந்தது.

1. குறுந்தொகை, 91.

# 6. ஔவையார் தூது

அக் காலத்தில் காஞ்சிபுரத்தில் தொண்டைமான் இருந்து அரசாண்டுவந்தான். அதிகமானுக்குப் பெரிய மன்னர்களுடன் நட்பை வளர்க்கவேண்டும் என்னும் அவா உண்டாயிற்று. பாண்டியனுக்குச் சில சமயங்களில் அதிகமான் போரில் உதவிபுரிந்தான். அதனால் அவனுடைய நட்புக் கிடைத்தது. ஔவையாரைப் போன்ற தமிழ்ப்புலவர்கள் அடிக்கடி மதுரைக்கும் தகடூருக்கும் மாறி மாறிப் போய்க்கொண்டிருந்தார்கள். அதன் வாயிலாகவும் அந்த நட்பு வலிமை பெற்றது. சோழ மன்னனிடமும் அதிகமான் உறவு பூண்டான். அடிக்கடி தக்க பெரியவர்களைத் தூதாக அனுப்பிச் சோழனுடைய நலங்களை விசாரித்து வரச் செய்வான். சேரர் குலத்தோடு மட்டும் அவனுக்கு நெருக்கம் இல்லாமல் இருந்தது. இன்று நேற்று வந்த பிளவு அன்று இது. மிகப் பழங்கால முதற்கொண்டு சேர மன்னர்களுக்கும் அதிகர் குலத்துக்குமிடையே ஒரு வகையான பகைமை இருந்து கொண்டே வந்தது. அதனால் சேரனுடன் மாத்திரம் அதிகமானுக்கு யாதோர் உறவும் இல்லாமல் இருந்தது.

தொண்டைமானுடைய தலைநகரம் நெடுந்தூரத்தில் இருந்தது; சோழ நாட்டுக்கு வடக்கே பல காவதங்களுக்கு அப்பால் உள்ளது. அங்கே புலவர்கள் அடிக்கடி போய் வருவதும் இல்லை. மதுரைக்கு அவர்கள் போவதுதான் மிகுதி. இதனால் தொண்டைமானுடைய தொடர்பு அதிகமானுக்கு உண்டாக வாய்ப்பு நேரவில்லை. எப்படியாவது சோழ பாண்டியர்களுடன் நட்புப்பூண்டதுபோலத் தொண்டைமானுடனும் உறவு

கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் அவனுக்கு எழுந்தது.

இதற்கு என்ன வழி என்று பல நாள் ஆராய்ந்து கொண்டிருந்தான். பிறகு, ஔவையாரைக் கொண்டு அந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று தோன்றியது. தன் கருத்தை அந்தப் புலவர் பெருமாட்டியிடம் அறிவித்தான். அவர் பேருவகையோடு, அவ்வாறே செய்யலாம் என்று சொன்னார். உடனே தக்க காவலர்களும், கையுறைகளைத் தாங்கிச் செல்லும் மக்களும், ஏவலர்களும் உடன் செல்லப் பணித்து, ஒரு சிவிகையில் ஔவையாரை ஏற்றித் தொண்டை நாட்டைநோக்கி அனுப்பினான் அதிகமான்.

கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்பார்கள். ஔவையார் சென்ற வழியில் எல்லாம் அவருக்குச் சிறப்புக் கிடைத்தது. மக்கள் அவரைக் கண்டு இன்புற்றார்கள். அன்பு கனியப் பேசினார்கள். சில நாட்களில் ஔவையார் காஞ்சியை அடைந்தார். மன்னர்க்குரிய வரிசைகளுடன் வந்த அவரை இன்னாரென்று தெரிந்துகொண்ட தொண்டைமான் அவரை வரவேற்றுப் பெருஞ் சிறப்புச் செய்தான். "தங்களுடைய பெருமையைக் காதாலே கேட்டிருக்கிறேன்; இப்போது கண்ணாலே தங்களைக் காணும் பேறு கிடைத்தது" என்று உவகை பொங்கக் கூறினான்.

"அதிகமானிடத்திலிருந்து நான் வருகிறேன். அவனுடைய வள்ளன்மையை யாவரும் அறிவார்கள். அவன் உன்னுடைய நட்பை வேண்டி என்னைத் தூதாக அனுப்பினான். தகடூர் என்னும் ஊரில் இருந்து, வீரமும் ஈகையும் விளங்க அரசாளும் அந்தத் தலைவனுடைய ஏவலை மேற்கொண்டு வந்திருக்கிறேன்" என்றார் ஔவையார்.

"தங்களைப் போன்ற பெரியவர்களை உறவினர்களாகப் பெற்ற அதிகமான் கிடைத்தற்கரிய பேறுடையவன்தான் என்று சொல்ல வேண்டும். அவனுடைய நட்பை ஏற்றுக்கொள்வது எனக்குப் பெருமையையே தரும்" என்று கூறி அளவளாவினான் தொண்டைமான்.

ஔவையார் காஞ்சிமாநகரின் எழிலைப் பார்த்தார். தொண்டைமானது அரண்மனையை நன்றாகப் பார்த்தார். "இந்த அரண்மனையில் படைக்கலங்களை வைத்திருக்கும் கொட்டிலை நீங்கள் பார்க்க வேண்டும். சேர சோழ பாண்டியர்களிடங்கூட இவ்வளவு படைக்கலங்கள் இருக்குமோ என்பது ஐயந்தான். மிகவும் நன்றாக அவற்றை வைத்துப் பாதுகாக்கும்படி செய்திருக்கிறேன்" என்று தொண்டைமான் கூறினான். ஔவையாரை அங்கே அழைத்துச் சென்றான்.

படைக்கலக் கொட்டில் பெரிதாகவே இருந்தது. ஒரு பக்கம் ஈட்டிகளாக வைத்திருந்தார்கள். மற்றொரு பக்கம் கேடயங்களாக இருந்தன. வேறு ஓர் இடத்தில் பளபளவென்று ஒளிர்ந்த வாள்களை மாட்டி வைத்திருந்தார்கள். வேல்கள் ஒருபால் விளங்கின. வில்லும் அம்பும் ஓரிடத்தில் இருந்தன. கவசங்களும், தலையில் அணிகின்ற இருப்பு முடிகளும் தனித்தனியே காட்சி அளித்தன. இன்னும் பல வேறு படைக்கலங்களை ஔவையார் அங்கே கண்டார். யானையின் அங்குசங்களும், குத்துக்கோல்களும் ஓரிடத்தில் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன. யானை நெருஞ்சிமுள்ளைப் போல இரும்பிலே செய்திருக்கும் படை ஒன்று உண்டு; அதற்குக் கப்பணம் என்று பெயர். போர்க்களத்தில் பகைவரின் யானை வேகமாக வரும்போது கப்பணங்களை அதன் முன் தூவுவார்கள். அதன் காலில் அவை தைக்கும்; மேலே நடக்க முடியாமல் அது தடுமாறும். அத்தகைய கப்பணங்கள் ஓரிடத்தில் குவியலாகக் கிடந்தன.

ஆயுதபூசை நடக்கும்போது தொழிலாளர்கள் தம் முடைய கருவிகளை யெல்லாம் தூசின்றித் துடைத்து மெருகிட்டு வைப்பார்கள்; பூவையும் மாலையையும் சூட்டி வழிபடுவார்கள். அங்கே இருந்த படைகள் எல்லாம் அந்த முறையில் விளங்கின. அவற்றைப் பளபள வென்று தேய்த்து எண்ணெய் பூசியிருந்தார்கள். உடைந்ததாக ஒன்றுமே இல்லை. எல்லாவற்றையும் நன்றாகச் செப்பஞ் செய்து பளபளக்கும்படி வைத்திருந் தார்கள். மயிற் பீலியைச் சிலவற்றிற்கு அணிந்து அழகு செய்திருந்தார்கள். மாலைகளைப் புனைந்திருந்தார்கள். அந்தக் கொட்டில் நல்ல பாதுகாப்பான இடத்தில் அமைந்திருந்தது. காவலர்கள் அங்கே இருந்து காவல் புரிந்து வந்தார்கள்.

"இத்தனை படைக்கலங்களையும் நீங்களே வாங்கி னீர்களா?" என்று ஔவையார் கேட்டார்.

"என் முன்னேர்கள் வைத்திருந்தவை பல; நான் வாங்கினவை சில."

"இப்போது ஏதேனும் விழா உண்டோ? இவற்றை நன்றாகத் தேய்த்து அணி செய்திருக்கிறீர்களே!"

"இப்போது மட்டும் அன்று; எப்போதுமே இவை இந்த நிலையில்தான் இருக்கும். ஒரு வேலின் முனை கூட முரிந்திராது."

"அடிக்கடி இவற்றைச் செப்பஞ் செய்யும்படி இருக்குமோ?"

"செப்பம் செய்ய வேண்டி இராது. அடிக்கடி துடைத்து நெய் பூசச் செய்வேன்."

"இந்தப் படைக்கலங்கள் யாவுமே உங்களுக்குப் பயன்படுகின்றனவா?"

"ஆம்; இவற்றால் எனக்கு எத்தனை பெருமை! வரு கிறவர்களுக்கெல்லாம் இந்தக் கொட்டிலைக் காட்டு வேன். கண்டவர்கள் யாவரும் வியப்படைகிறார்கள்."

ஔவையாருக்கு உண்மை விளங்கியது. தொண்டைமான் போரில் ஈடுபடுகிறவன் அல்லன் என்பதை அறிந்துகொண்டார்.

தொண்டைமான், "அதிகமான் படைக்கலக் கொட்டில் இதில் பாதியாவது இருக்குமா? அங்கே படைக் கருவிகளைக் கருத்துடன் திருத்தமாகப் போற்றி வருகிறார்களா?" என்று கேட்டான்.

ஔவையார் என்ன சொல்வதென்று சிறிதே சிந்தனையுள் ஆழ்ந்தார்.

தொண்டைமான், "அவன் கொட்டிலையும் இதையும் ஒப்பு நோக்கும்போது இதன் பெருமை உங்களுக்குத் தெரிகிறதென்று நினைக்கிறேன். அதனால் தான் நீங்கள் அங்குள்ள நிலையைச் சொல்ல நாணுகிறீர்கள் போலும்!" என்றான்.

தமிழ்ப் பெருமாட்டிக்கு இந்த வார்த்தைகள் நயமுடையனவாகத் தோன்றவில்லை. 'கொலு வைத்தது போல இவற்றை வைத்துக் கொண்டாடுகிறான். இந்தப் படைக்கலங்கள் வீரர்கையில் ஏறி எத்தனையோ ஆண்டுகள் ஆகியிருக்க வேண்டும். இதை ஒரு பெருமையாக எண்ணுகிறானே?' என்பதை நினைக்கையில் அவருக்கு உள்ளூறச் சிரிக்கத்தான் தோன்றிற்று. அதிகமான் பெருமையை வெளியிட வாய்ப்பான சமயம் வந்திருக்கிற தென்று மகிழ்ந்தார். "அதிகமானிடம் உள்ள படைக் கலங்களுக்கும் இங்குள்ளவற்றுக்கும் எத்தனையோ வேறுபாடுகள். இங்கே இவற்றைத் தெய்வமாக அல்லவா வைத்துப் போற்றுகிறீர்கள்? அங்கே—"

"அங்கே இப்படி இல்லையா? படைக்கலக் கொட்டில் இருக்கிறதல்லவா?"

"இருக்கிறது, இருக்கிறது. ஆனால் அங்கே படைக் கலங்களைத்தான் சேர்ந்தாற்போல் காணமுடியாது."

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"

"இங்கே உள்ள கருவிகள் செல்வப் பிள்ளைகளைப் போலப் பளபளவென்று விளங்குகின்றன; பீலியை அணிந்தும் மாலையைச் சூட்டிக் கொண்டும் அழகாகக் கிடக்கின்றன. பிடிகளை நன்றாகச் செப்பஞ் செய்து திருத்தமாக வைத்திருக்கிறீர்கள். துருவேறாமல் அடிக்கடி நெய் பூசி வருகிறீர்கள். இந்தக் கொட்டிலில் இவை பாதுகாப்பாக உள்ளன. ஆனால் அதிகமானுடைய படைக்கலங்களோ—"

தொண்டைமான் அவர் சொல்லப் போவதைக் கேட்க ஆவலுடன் இருந்தான். ஔவையார் தொடர்ந்து கூறினார்.

"அவைகளில் பலவற்றிற்கு முனை முரிந்து போயிருக்கும். பலவற்றிற்குக் காங்குகள் ஒடிசலாக இருக்கும்."

"ஏன் அப்படி?"

"பகைவர்களைக் குத்தி அப்படி ஆயின. ஒரு கருவியாவது முழு உருவோடு இராது. எல்லாம் சிதைந்து உருக் குலைந்திருக்கும்."

"அவற்றை அப்படியே படைக்கலக் கொட்டிலில் போட்டிருக்கிறார்களா?"

"படைக்கலக் கொட்டில் என்பது பேருக்குத் தானே அன்றிப் படைக்கலங்கள் அங்கே இருப்பதில்லையே! போரிலிருந்து நுனி ஒடிந்தும் வளைந்தும் பூட்டுக் கழன்றும் பிடி உடைந்தும் வரும். அப்படியே கொல்லன் பட்டறைக்கு அதிகமான் அனுப்பி விடுவான். அங்கேதான் அவற்றைப் பார்க்கலாம். அவை செப்பஞ் செய்து வந்தால் அடுத்த போர் காத்திருக்கும். இந்த அழகு வருமா?"

மூதாட்டி உள்ளே ஒரு குறிப்பை வைத்துப் பேசினார். அதிகமானுடைய படைக்கலங்களை இழித்துக் கூறுவதுபோல அவனுடைய வீரத்தைப் புகழ்ந்தார்.

தொண்டைமானுடைய படைக்கருவிகளைப் புகழ்வது போல, அவை பயனின்றிக் கிடப்பதைக் குறிப்பிட்டு இகழ்ந்தார்.

"படைக்கலங்களைப் பாதுகாத்து வைப்பதற்கே எவ்வளவோ செலவாகிறது" என்று ஔவையாரின் குறிப்பை உணராமல் மேலும் தொண்டைமான் பேசினான்.

"நீங்கள் பெரிய அரசர். அதனால் இப்படியெல்லாம் அழகு பண்ண முடிகிறது. அதிகமான் சிற்றரசன் தானே? கையிலே இருந்தால் வறியவர்களுக்கு வேண்டியவற்றை வாரி வழங்குவான்; இல்லையானால் தான் உண்ணுவதை அவர்களுக்கும் பகிர்ந்தளித்து மகிழ்வான்."

அதிகமானுடைய ஈகையையே இந்த மொழிகளால் ஔவையார் புலப்படுத்தினார். தொண்டைமானோ அதிகமானை வறியன் என்று சொல்வதாக எண்ணிக் கொண்டான். "தங்களுடைய திருவாக்கால் என்னுடைய படைக்கலக் கொட்டிலைச் சிறப்பித்து ஒருபாடல் பாடியருள வேண்டும்" என்று பணிவாக வேண்டினான்.

"அப்படியே செய்கிறேன். அதிகமானுடைய படைக்கல நிலையையும் சேர்த்தே பாடுகிறேன்" என்று தாம் கூறிய கருத்துக்களையெல்லாம் அமைத்து ஒரு பாடலைப் பாடினார் ஔவையார்.

> இவ்வே, பீலி அணிந்து மாலை சூட்டிக்
> கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து
> கடியுடை வியனக ரவ்வே; அவ்வே,
> பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
> கொற்றுறைக் குற்றில மாதோ; என்றும்
> உண்டாயின் பதம்கொடுத்து
> இல்லாயின் உடன்உண்ணும்

இல்லோர் ஒக்கல் தலைவன்,
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.[1]

[இவைகளோ, மயிற்பீலியை அணிந்து, மாலை சூடடி, உருவம் திரண்ட வலிமையுடைய காம்பு அழகுறச் செய்து நெய் இடப்பெற்று, காவலையுடைய அகன்ற அரண்மனையில் இருக்கின்றன. அவையோ—எப்போதும் வளம் இருந்தால் வேண்டிய உணவுகளை வழங்கி, வளம் இல்லையானால் தான் உண்ணுவதைப் பகிர்ந்தளித்து உடனுண்ணும் ஏழைகளின் உறவினனும், தலைவனும், அண்ணலுமாகிய எம் கோமான் அதிகனுடைய கூரிய முனையையுடைய வேல்களோ—பகைவர்களைக் குத்திப் பக்கங்களும், நுனியும் சிதைந்து, கொல்லனுடைய உலைக்களமாகிய சிறிய இடத்தில் இருக்கின்றன. இவ்வே-இவை. பீலி - மயிற்பீலி. கண்-இடம்; இங்கே உருவம். நோன் காழ் - வலிய காம்பு. கடி - காவல். வியல் நகர - அகன்ற அரண்மனையில் உள்ளன. நகரவே என்பது நகரவ்வே என்று விகாரமாக நின்றது. அவ்வே - அவை. கோடு - பக்கம். நுதி-நுனி. கொல் துறை - கொல்லனுடைய உலைக்களமாகிய. குற்றில - குறிய இல்லில் உள்ளன. பதம் - உணவுப் பொருள். இல்லோர் - வறியவர்கள். ஒக்கல் - உறவினன். வை - கூர்மையான.]

தொண்டைமான் இதைக் கேட்டு மகிழ்ந்து போனான். ஔவையார் சில காலம் அங்கே தங்கி அதிகமானுடைய குண நலங்களை யெல்லாம் தொண்டைமானுக்குச் சொன்னார். அத்தகைய அறிவுடைப் பெருமகளாருடைய மதிப்புக்குரியவனாக இருப்பதற்கு அதிகமானிடம் ஏதோ சிறப்பிருக்க வேண்டும்என்பது அம் மன்னனுக்குப் புலனாயிற்று. "அதிகமானுடைய நட்பு உங்களால் கிடைத்ததற்கு நான் மிக்க நன்றி பாராட்டுகிறேன்" என்று மனம் கனிந்து கூறினான்.

---

1. புறநானூறு, 95

# 7. கோவலூர்ப் போரும் குமரன் பிறப்பும்

திருக்கோவலூரில் மலையமான் திருமுடிக் காரி என்னும் வீரன் வாழ்ந்துவந்தான். ஒரு சிறிய நாட்டுக்குத் தலைவன் அவன். அந்த நாட்டுக்கு மலாடு என்று பெயர். மலையமான் என்பது அவனுடைய குடிப் பெயர். மலையமான்களுடைய நாடு மலையமான் நாடு. அந்தப் பெயர் நாளடைவிலே சிதைந்து மலாடு என்று ஆகிவிட்டது.

காரி சிறந்த வீரன். ஆற்றலும் ஆண்மையும் உள்ள பல வீரர்களை உடைய பெரும் படை ஒன்று அவனிடம் இருந்தது. தமிழ் நாட்டில் பெரிய மன்னர்களுக்குத் துணைப் படையாக அதைத் தலைமை தாங்கி நடத்திச்சென்று அம்மன்னர்கள் வெற்றியடையும்படி செய்வான் காரி. பாண்டியன் அழைத்தாலும் துணையாகப் போவான்; சோழன் அழைத்தாலும் போவான்; சேரமானுக்கும் துணையாகப் போவதுண்டு. அவன் யாருக்குத் துணையாகச் செல்கிறானோ அந்த மன்னன் வெற்றி அடைவது உறுதி என்ற புகழ் அவனுக்கு இருந்தது.

வெற்றி பெற்ற மன்னர்கள் காரிக்கு மிகுதியான பொருளும் பொன்னும் தருவார்கள்; ஊரைக் கொடுப்பார்கள்; தேர், யானை, குதிரைகளை வழங்குவார்கள். ஆதலின், அவனுக்கு எதனாலும் குறைவு இல்லாமல் வாழும் நிலை அமைந்தது. அப்படிப் பெற்றவற்றை அவன் தனக்கென்று வைத்துக்கொள்வதில்லை; புலவர்களுக்குக் கொடுப்பான்; பாணர்களுக்கு வழங்குவான்; ஏழைகளுக்கு ஈவான்; கூத்தர்களுக்கு அளிப்பான்.

எத்தனை கிடைத்தாலும் அத்தனையையும் பிறருக்கு ஈந்து மகிழ்வது அவன் இயல்பு.[1]

அவனுடைய வீரத்தை முடிமன்னர்களும் பாராட்டினார்கள். அவன் ஈகையைக் கலைஞர்கள் புகழ்ந்தார்கள். இரண்டையும் பாவாணர்கள் பாடல்களில் அமைத்துச் சிறப்பித்தார்கள்.

திருமுடிக்காரிக்குச் சேரமான் நெருங்கிய நண்பனாக இருந்தான். அக் காலத்தில் வஞ்சிமாநகரத்தில் இருந்து அரசாண்டவன் பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் மன்னன். அவன் காரியின் வீரத்தை நன்கு அறிந்து அடிக்கடி வரச் செய்து அளவளாவி இன்புறுவான்.

ஒரு முறை காரி வஞ்சி மாநகருக்குப் போயிருந்த போது, சேரமான் தன் மனத்தில் நெடுநாளாக இருந்த விருப்பம் ஒன்றை வெளியிட்டான். கொல்லி மலையைச் சார்ந்த பகுதிகளை ஓரி என்ற குறுநில மன்னன் ஆண்டு வந்தான். அவன் விற்போரில் வல்லவன். அதிகமானுக்கும் அவனுக்கும் ஓரளவு உறவு இருந்தது. அதிகமான் நாளடைவில் தன்னுடைய நாட்டை விரித்துக்கொண்டு வருவதைப் பெருஞ்சேரல் இரும்பொறை கண்டான். அதைக் கண்டு பொறாமை உண்டாயிற்று. அவனை அடக்க வேண்டுமானல் அவனுடைய நாட்டுக்கு அருகில் தன் படை இருக்கவேண்டும் என்று கருதினான். ஓரியின் கொல்லிக் கூற்றம் அதிகமானுடைய நாட்டை அடுத்து இருந்தது. ஓரி பெரும் படையை உடையவன் அல்லன். அவனை அடக்கி அவன் நாடாகிய கொல்லிக் கூற்றத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டால் அதிகமானை அடுத்தபடி அடக்குவது எளிதாக இருக்கும் என்பது சேரனுடைய திட்டம்.

இந்தக் கருத்தைக் காரியிடம் எடுத்துச் சொன்னான், பெருஞ்சேரல் இரும்பொறை; "தக்க செவ்வி

1. புறநானூறு, 122.

பார்த்துக் கொல்லிக் கூற்றத்தின் மேல் படையெடுத்துச் செல்லலாமென்று இருக்கிறேன். அப்போது உம்முடைய உதவி வேண்டியிருக்கும்'' என்றான்.

காரி புன்முறுவல் பூத்தான்.

''ஏன்? நான் கூறியது தக்கதாகத் தோன்றவில்லையோ?'' என்று கேட்டான் சேரமான்.

''அப்படி எண்ணவில்லை. ஓரி மிகச் சிறியவன். காலில் தைத்த முள்ளையெடுக்கக் கோடரியை வீச வேண்டுமா? மன்னர்பிரான் திருவுள்ளத்தை நான் அறிந்து கொண்டேன். என்னுடைய படையோடு நான் சென்று பொருதால் இரண்டு நாளைக்கு அவன் நிற்கமாட்டான்.''

''ஒருகால் அதிகமான் அவன் துணைக்கு வந்தால்—?''

''ஓரிக்கும் அதிகமானுக்கும் அவ்வளவு நெருங்கிய தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. ஒருகால் சேர நாட்டுப் படை சென்று தாக்கினால் அவன் இது தான் சமயம் என்று போருக்கு எழுந்தாலும் எழலாம். நான் தாக்கினால் அவன் கவலைகொள்ள மாட்டான்.''

''சரி; உமக்கு எது நல்லதென்று தோன்றுகிறதோ அதையே செய்யலாம்'' என்று சேரன் காரியின் கருத்துக்கு உடம்பட்டான்.

காரி விடை பெற்றுத் திருக்கோவலூருக்கு வந்து போருக்கு ஆவனவற்றைச் செய்தான். 'கொல்லிக் கூற்றத்தைச் சேரமானுக்குக் கொடுத்தால், அவனுக்கு அடங்கிய வேளாக ஆட்சி புரியலாம்; இல்லையானால் போருக்கு வருக' என்று கூறிக் காரி ஓரிக்குத் தூது போக்கினான். நெடுங்காலமாக உரிமை வாழ்வு வாழ்ந்தவனுக்கு ஒருவனுக்கு அடங்கி வாழ மனம் வருமா? அவன் உடம்படவில்லை.

காரி போர் முரசு கொட்டிவிட்டான். தன் படைகளை வகுத்து ஓரியின் நகரை முற்றுகையிட்டான்.

ஓரியிடம் விற்போரில் சிறந்த வீரர்கள் பலர் இருந்தார்கள். அவர்கள் மிடுக்குடன் காரியின் படையை எதிர்த்து நின்றார்கள். காரிக்குக் காரி யென்ற பெயரோடு ஒரு கருங்குதிரை இருந்தது. அவன் அதன்மேல் ஏறிவந்தான். ஓரிக்கும் ஓரி யென்ற பெயரையுடைய பரி இருந்தது. போர் முகத்தில் இருசாரார் படையும் சந்தித்து மோதின. ஓரியின் நாடு ஆதலால் அங்குள்ள மக்களில் வலிமை யுடைய இளைஞர்கள் அவன் படையில் சேர்ந்தார்கள். அறநெறி திறம்பிச் சேர மன்னனுடைய தூண்டு தலால் காரி படையெடுத்ததைப் பொறுமல் அவர்கள் கூட்டம் கூட்டமாகப் படையில் சேர்ந்து திறலுடன் போரிட்டனர்.

இரண்டு மூன்று நாட்கள் கடுமையாகப் போர் நடந்தது. காரி அதுவரையில் தன் பாசறையில் இருந்தபடியே இன்ன இன்னவாறு செய்ய வேண்டு மென்று கட்டளை பிறப்பித்துக் கொண்டிருந்தான். மூன்று நாட்களாக நடந்த போரில் யார் விஞ்சுவார் கள் என்று தெரியவில்லை. 'இனி நாம் சும்மா இருத்தல் கூடாது' என்று காரி தானே போர் முனைக்கு வந்தான்; காரி யென்னும் குதிரையின்மேல் ஏறி அவன் போர்க்களத்தில் வந்து நின்றவுடன், அவனுடைய படை வீரர்களுக்குப் புதிய முறுக்கு ஏறியது. தம் வலிமையை யெல்லாம் காட்டிப் போர் புரிந்தனர்.

ஓரி தன் குதிரையின்மேல் ஏறிவந்து போர் செய் தான். அவன் படையில் இப்போது தளர்ச்சி நிழலா டியது. படைத் தலைவர்களிலே சிலர் வீழ்ந்தனர். ஓரி தன் குதிரையை முன்னே செலுத்திக் காரி யிருந்த இடத்தை அடைந்தான். இப்போது காரியும் ஓரியும் நேருக்கு நேராக நின்று போர் செய்தார்கள். காரி வைரம் பாய்ந்த மரம் போன்றவன்; எத்த

1. சிறுபாணாற்றுப்படை, 110-111.

னையோ பெரும் போர்களைச் செய்து வெற்றி கண்டவன். அவனுக்கு முன் நிற்பதென்பது எத்துணைப் பெரிய வீரனாயினும் இயலாத செயல். ஓரியால் எப்படி நிற்கமுடியும்? ஆனால் அவன் சிறிதும் பின் வாங்கவில்லை. தளர்வு தோன்றினாலும் தன் உயிரைப் பிடித்துக்கொண்டு தாக்கினான். என்ன பயன்? கடைசியில் காரியின் வாளுக்கு அவன் இரையானான். காரி வென்றது வியப்பே அன்று. ஓரி ஓடாமல் ஒளியாமல் நேர் நின்று போர் செய்து உயிரை விட்டதைக் கண்டு யாவரும் வியந்தனர். அவனுடைய நாட்டை அடிப்படுத்திய காரி அதைச் சேரமானுக்கு ஈந்தான்.[1] சேரமான் தக்க அதிகாரிகளையும் படைத் தலைவரையும் கொல்லிக் கூற்றத்துக்கு அனுப்பித் தன் ஆட்சியைச் செலுத்தலானான்.

சேரமான் செய்த இந்தச் செயலைச் சான்றோர்கள் போற்றவில்லை. அதிகமானுக்குச் சேரமான்பால் கோபம் மிக்கது. அவனுக்குக் கருவியாக இருந்து ஓரியைக் கொன்ற காரியை உடனே போய்க் கொன்றுவிட்டு வரவேண்டும் என்ற ஆத்திரம் உண்டாயிற்று. ஓரி கொல்லப்பட்டான் என்ற செய்தியைக் கேட்ட அந்தக் கணத்திலேயே அவன் காரியைப் பழிவாங்கவேண்டும் என்ற வஞ்சினத்தைச் செய்தான். ஆறப் போட்டுக் காரியோடு பொருவதைவிட உடனே தன் எண்ணத்தை நிறைவேற்ற வேண்டும் என்று துடித்தான்.

அதற்கு ஒரு தடை இருந்தது. அவனுடைய மனைவி கருவுற்றிருந்தாள். பல காலம் மகவு இல்லாமல் இருந்த அவளது கலி தீரும் பருவம் வந்தது. அந்தச் சமயத்திலா போர் புரியப் போவது? இதை அதிகமானைச் சேர்ந்த பெரியோர்கள் எடுத்துச் சொன்னார்கள். அவன் அரசியலில் வல்லவன். மாற்றான் வலியை அறிந்து

1. அகநானூறு, 209.

வைத்து அவன் சோர்வுற்ற செவ்வி கண்டு தாக்க வேண்டும் என்பதை நன்கு உணர்ந்தவன். கொல்லிக் கூற்றத்தில் நிகழ்ந்த போரில் அவனும் அவன் படையும் ஈடுபட்டுச் சோர்வடைந்திருந்த காலம் அது. அதுவே எளிதில் திருக்கோவலூரின்மேல் படையெடுக்கத் தக்க செவ்வி என்பது அவன் எண்ணம். ஆதலின், இப்போதே படையெழுச்சி நடக்கவேண்டும் என்ருன். அவன் உறவினர்கள் அவனுக்கு எதிராகச் சொல்லும் ஆற்றல் உடையவர்கள் அல்லரே! அவர்கள் ஔவையாரை அணுகித் தங்கள் கருத்தைச் சொன்ஞர்கள். அவர் அதிகமானிடம் சென்று போரைச் சிறிது தாழ்த்து மேற்கொள்ளலாமே என்ருர். "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ள வேண்டும். சிறிது தாழ்த்தால் காரி மறுபடியும் ஊக்கம் பெற்று வலிமையுடையவனுகி விடுவான்" என்ருன் அதிகமான்.

"இறைவன் திருவருளால் உனக்கு மகவு பிறக்கப் போகிறது. குழந்தை பிறந்தவுடன் பார்க்க வேண்டியது தந்தையின் கடமை. நீ அங்கே போரில் ஈடுபட்டிருக்கும்போது, இங்கே குழந்தை பிறந்தால் உன்ஞல் எப்படிக் காணமுடியும்? அதோடு, போரின் முடிவு என்னுகுமோ என்று உன் மனைவி அச்சத்தோடு இருப்பாளே! கருவுற்ற பெண்கள் மனம் மகிழ்ச்சியோடு இருப்பது இன்றியமையாதது."

"போர் செய்வதே வாழ்க்கையாகப் போய்விட்ட எனக்குப் புதிய போர் என்ருல் ஊக்கம் உண்டாகிறது. வீரக் குலத்திலே புகுந்த என் மனைவி நான் போருக்குச் செல்வது கண்டு அஞ்சுவதாஞல், அதைவிட இழுக்கான செயல் வேறு இல்லை. அவள் அப்படி அஞ்சுபவள் அல்லள் என்பது எனக்கு நன்ருகத் தெரியும் அவள் உவகையுடன் போய் வாருங்கள் என்று விடை கொடுத்தனுப்புவாள் என்றே நம்புகிறேன்."

"வீரக் குலத்து உதித்த பெண்களின் பெருமையை, பாடிப் பரிசில் பெற்று வாழும் பெண்ணாகிய யான் எப்படி அறிவேன்? ஆயினும், பிறந்தவுடன் குழந்தையைத் தந்தை பார்க்க வேண்டும் என்று பெரியோர்கள் சொல்வார்கள்."

"நான் போர்க்களத்தில் இருக்கும்போது செய்தி வந்தால் உடனே வந்து பார்க்கிறேன்."

அதிகமான் தான் எண்ணிய எண்ணத்தில் திண்ணமுடையவனாக இருக்கிறான் என்பதை உணர்ந்து கொண்டார் ஔவையார். மேலே ஒன்றும் பேசவில்லை. முறைப்படி போருக்குரிய ஏற்பாடுகள் நடைபெற்றன. அதிகமான் படையெடுத்துவருவதைக்காரி அறிந்தான்.

பெண்ணையாற்றங்கரையில் இருப்பது திருக்கோவலூர். அதிகமான் படைகள் அங்கே சென்று சூழ்ந்து கொண்டன. மலையமான் ஓரியைக் கொன்று வந்த பெருமிதத்தாலும், பெருஞ்சேரலிரும்பொறையிடம் பரிசில்கள் பெற்ற மன நிறைவினாலும் கூத்தும் பாட்டும் கேட்டு இன்புற்றிருந்தான். மற்றொரு போருக்கு அவன் ஆயத்தமாக இருக்கவில்லை. ஆனாலும் வாயில் கதவை எதிரி வந்து தட்டும்போது சும்மா இருக்க முடியுமா? அவனும் போர் வீரர்களைக் கூட்டினான்; போர் செய்யலானான்.

ஓரியின் படைநிலை வேறு; அதிகமான் படை நிலை வேறு. அதிகமான் பெரிய நாட்டை உடையவன். பெரிய படை அவனுடைய கட்டளையை நிறைவேற்றக் காத்திருந்தது. பல போரிலே வெற்றி பெற்ற படை அது. காரியின் படையும் தாழ்ந்ததன்று. ஆயினும் அணிமையில் போரிட்டுக் களைப்புற்றிருந்த சமயம் அது. ஆதலின் இயல்பாக உள்ள ஊக்கம் அப்போது இல்லை. இருப்பினும் மானம் பட வரின் உயிர் விடுவது இனிதென்ற கொள்கையினராதலின் கொதித்து எழுந்

தனர் வீரர். "என் அயல்நாட்டுத் தலைவனும் என் நண்பனுமாகிய ஓரியை அறநெறி திறம்பிக் கொன்ற தற்காகவே இப்போது கோவலூரைத் தாக்குகிறேன்" என்று முரசறையச் செய்தான் அதிகமான்.

போர்மூண்டது;இருபடையும் மிடுக்குடன்ஒன்றை ஒன்று தாக்கின. காரியின் படை தளர்ச்சி காட்டியது. அந்தச் சமயம் பார்த்து அதிகமான்வீரர்களைத் தூண்டி னன். காரி இந்த நிலையை நன்றாக அளவிட்டு அறிந்தான். மேற்கொண்டு போரிட்டால் தனக்குத் தோல்விஉறுதிஎன்பதைஉணர்ந்தான். தான்ஓரியைக் கொன்றதற்கு ஈடாக அதிகமான் தன்னைக் கண்டால் கொன்றுவிடுவான் என்றஅச்சமும்அவனுக்குஉண்டா யிற்று. அதனால் அவன் இல்லாதபக்கமாகச் சென்று போர் செய்தான். இனி எதிர்த்தால் உயிருக்கு ஊறு பாடு நிகழும் என்ற நிலைவந்தவுடன் திருக்கோவலூரை விட்டுவிடத் தீர்மானித்தான். அவனும் அவன் படை வீரர் சிலரும் பின் வாங்கி ஓடி ஒளிந்தனர். ஏனைய வர்கள் சரண் அடைந்தனர்.

வெற்றிமாலையைப்புனைந்து நின்ற அதிகமானுக்கு மற்றொருகளிப்புச்செய்தி காத்திருந்தது.தகடூரிலிருந்து வந்த தூதுவன் ஒருவன் அவனுக்கு மகன் பிறந்திருக் கிறான் என்ற மங்கலச் செய்தியைச் சொன்னான்.கோவ லூர் வெற்றியோடு இந்தச் செய்தியும் சேர்ந்து அவனுக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை உண்டாக்கின.

உடனே, தன் படைத் தலைவர்களிடம் வேண்டிய வற்றைச் செய்யும்படி சொல்லிவிட்டுத்தன் குதிரையில் ஊர்ந்து போர்க்கோலத்துடனேவிரைவாகச்சென்றான் அதிகமான். தகடூரை அடைந்து நேரேஅந்தப்புரத்தை அணுகினான். அவன் உள்ளூரில் இருந்திருந்தால் நீராடிப் புனைவனபுனைந்து பூசுவனபூசி,பெரியோர்களை முன்னிட்டுக்கொண்டு வந்திருப்பான். இப்போதோ

நேரே வெற்றிக் களத்திலிருந்து ஓடிவந்திருக்கிறான். அவன் மனைவி தவமகனைப் பெற்றிருந்தாள். அவனோ வெற்றி மகளைப் பெற்று வந்தான். ஆர்வத்தோடு புகுந்து நின்ற அதிகமானுக்கு அவன்குலத்தை விளக்க வந்த குழந்தையைக் கொண்டுவந்து காட்டினார்கள். ஔவையார் அருகிலே நின்றுகொண்டிருந்தார்.

வெற்றி மிடுக்குடன் போர்க்கோலத்தைக் களை யாமல் வந்து நிற்கும் அதிகமானை அவர் கண் எடுத்துப் பார்த்தார். அவன் தோற்றம் அவருக்கு வியப்பைத் தந்தது. அவன் எப்படிக் காட்சி அளித்தான் ?

கையில் வேல்; காலில் கழல்;உடம்பிலே வேர்வை; அவன் கழுத்திலே பச்சைப்புண். அவன் தலையிலே பனை மாலை; போர் செய்ய அணிந்த வெட்சி மாலை, வேங்கைக் கண்ணி இவற்றை அவன் முடியிலே சூடியிருந்தான். புலியோடு பொருத ஆண் யானையைப்போல இன்னும் அவனுக்குப் பகைவர்பால் உண்டான சினம் அடங்க வில்லை. அவனோடு பொருதவர்களில் யார் உய்ந் தார்கள்? பகைவர்களைக் கண்டு சினத்தாற் சிவந்தகண் இன்னும் சிவப்புத் தீரவில்லை; ஆம், தன் தவக்கொழுந் தாகிய மகனைப் பார்த்தும் கண் சிவப்பு வாங்கவில்லை.

வீரமே இப்படி உருவெடுத்து வந்ததோ என்று வியந்தார் ஔவையார். அவருடைய வியப்புணர்ச்சி உடனே பாடல் வடிவத்தை எடுத்தது.

> கையது வேலே; காலன புனைகழல்;
> மெய்யது வியரே; மிடற்றது பசும்புண்.
> வட்கர் போகிய வளர்இளம் போந்தை
> உச்சிக் கொண்ட ஊசிவெண் தோடு
> வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
> சுரியிரும் பித்தை பொலியச் சூடி
> வரிவயம் பொருத வயக்களிறு போல

*இன்னும் மாருது சினனே! அன்னே!*
*உய்ந்தனர் அல்லர்இவன் உடற்றி யோரே;*
*செறுவர் நோக்கிய கண்,தன்*
*சிறுவனை நோக்கியும் சிவப்புஆ னவே.*[1]

[*வியர்-வேர்வை. மிடறு-கழுத்து. வட்கார்-பகைவர். போகிய-அழிவதற்குக் காரணமான. போந்தை-பனை. உச்சி-மரத்தின் உச்சி. ஊசி வெண் தோடு-ஊசி போன்ற முனையையுடைய குருத்து ஓலை. விரைஇ-கலந்து. சுரி இரும் பித்தை-சுருண்ட கரிய தலை மயிர். வரிவயம்-புலி. வயக்களிறு-வலிமையுடைய ஆண் யானை. இன்னும் ஆருது என்று பிரிக்கலாம். அன்னே-அந்தோ; இரக்கக் குறிப்பு. உடற்றியோர்-எதிர்த்தவர்கள். செறுவர்-பகைவர்களை. சிறுவனை-மகனை. ஆனு-நீங்கவில்லை.*]

மகனைக் கண்டு மகிழ்ந்த அதிகமான், திருக்கோவலூரில் தக்க படைத்தலைவரை நிறுவ ஏற்பாடு செய்தான். பிறகு மகன் பிறந்ததற்குப் பெரு விழாக் கொண்டாடினான். படை வீரர்களுக்குப் பொன்னும் பண்டமும் வீசினான். புலவர்களுக்குப் பரிசில் பல வழங்கினான். பாணரும் விறலியரும் கூத்தரும் பல வகைப் பொருள்களைப் பெற்றார்கள். அதிகமானுடைய நாடு முழுவதுமே களிக் கூத்தாடியது. திருக்கோயில்களில் சிறப்பான பூசனைகளும் விழாக்களும் நடந்தன.

பிறந்த மகனுக்குப் பொகுட்டெழினி என்ற பெயரைச் சூட்டினான் அதிகமான். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து தன் பிள்ளைப்பருவ விளையாடல்களால் பெற்றோர்களையும் மற்றோர்களையும் மகிழச்செய்தான். அதிகமான் குலம் மங்காமல் இவனால் ஒளிரும் என்று சான்றோர்கள் இன்புற்று உள்ளங் கனிய வாழ்த்தினார்கள்.

---

1. புறநானூறு, 100.

# 8. இயலும் இசையும்

முடியுடை மன்னர்கள் தம் படைக்கு வலிமை போதாதென்று கருதினால் துணையாக வரவேண்டு மென்று காரியை அழைப்பார்கள். காரியின் துணை யிருந்தால் வெற்றி தமக்கே கிடைக்கு மென்று நினைப் பார்கள். அத்தகையவனுடைய வீரத்தையும் படை வலிமையையும் எப்படி அளந்து சொல்ல முடியும்? அந்தப் பெரு வீரனை ஊரை விட்டு ஓடச் செய்தான் அதிகமான் என்ற செய்தியை முடி மன்னர்கள் கேட் டார்கள். சோழன் அதிகமானைப் பாராட்டி மகிழ்ந்தான். பாண்டியன் தன் நண்பன் இத்துணை வலிமையுடைய வனாக இருக்கிறானே என்று எண்ணிப் பெருமிதம் கொண்டான். பெருஞ்சேரல் இரும்பொறையோ ஒன் றும் தோன்றாமல் மயங்கினான்; வருந்தினான். வீர ருலகம் அதிகமானைக் கொண்டாடிப் போற்றியது. புலவர்கள் அவன் வெற்றியைப் பாடினார்கள்.

பரணர் என்னும் பெருங் கவிஞர் அதிகமான் திருக்கோவலூரைத் தாக்கிக் காரியை ஓடச் செய்தான் என்பதைக் கேள்வியுற்று அவனைப் பார்க்க வந்தார். அவனுடைய மகனையும் கண்டு மகிழ்ந்தார். அதிகமா னுடைய வீரத்தைப் பல பாடல்களால் பாடினார். அந்தப் பாடல்களைக் கேட்டவர்கள் அவற்றின் சுவையிலே ஆழ்ந்து இன்புற்றார்கள். அதிகமானுடைய நல்லியல் புகள் எல்லாவற்றையும் பல வகையில் பாராட்டிப் பாடிய ஔவையாருக்கு இப்போது என்றும் இல்லாத இன்பம் உண்டாயிற்று. தம்முடைய தம்பியாகவே எண்ணி அன்பு பாலித்த அதிகமானைப் பெரும் புலவர்கள் பலர் பாட வேண்டும் என்ற ஆவல் அவருக்கு இருந்தது. இப்

போது திருக்கோவலூரில் அவன்பெற்ற வெற்றியைப் பரணர் பாடியதைக் காதாரக் கேட்டு அவர் மனம் நிறைவு பெற்றது. ஒரே மாதிரி அணிகளையும் மாலை களையும் அணிந்து புனைவதைவிட, பலவகை மணிகளை யும் அணிகளையும் பல வண்ண மாலைகளையும் அணிந்து கோலம் செய்வதுதானே சிறப்பாக இருக்கும்? அது போன்ற சிறப்பு இப்போது அதிகமானுக்கு உண்டாகி விட்டது என்று அந்தத் தண்டமிழ்ச் செல்வியாருக்கு மகிழ்ச்சி பொங்கியது. அவரும் ஒரு பாட்டுப் பாடினார்.

"உன் முன்னோர்கள் அரிய செயல்கள் பல செய்த வர்கள். அமரர்களை வழிபட்டு வேள்விகளைச் செய்து ஆகுதி அளித்தார்கள். பெறுவதற்கரிய உயர்ந்த வகை யான கரும்பை இந்த நாட்டுக்குக் கொண்டு வந்து விளையச் செய்தார்கள். கடல்புடை சூழ்ந்த உலகில் தம் ஆழியைச் செலுத்தி வழிவழியாக ஆண்டுவந்தார்கள். அவர்களைப் போலவே நீயும் பல அரிய செயல்களைச் செய்தாய். அவர்களைப்போலவேவீரத்துக்குஅடையாள மாகப் பொன்னாலாகிய வீரக்கழலை அணிந்திருக்கிறாய். உன் குலப்பெருமையைக் காட்டும் பனைமாலையைப் புனைந்திருக்கிறாய். அவர்கள் தேவர்களை நிறுவி விழா வெடுத்து வழிபட்ட அழகிய மலர்ப் பொழிலை நீ இன்றும் காத்து வருகிறாய். அவர்கள் ஏந்தியது போலவே வேலை ஏந்தி நிற்கிறாய். அவர்கள் ஏழு மன்னர்களை வென்ற தற்கு அடையாளமாக அம்மன்னர்களின் அடையாளக் கொடிகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அவர்களிட மிருந்து நீ உரிமையைப் பெற்ற பின்பு, நீயும் ஏழு பேரோடு பொருது வென்றாய். இவ்வளவு சிறப்புடைய நீ அன்றோ பாடுவதற்குரிய பெரும் புகழோடு நின்றாய்? இன்று உன் புகழ் பின்னும் மிகுந்திருக்கிறது. திருக் கோவலூரில் காரியோடு மலைந்து பெற்ற வெற்றி எல் லோருக்கும் கிடைக்குமா? இப்போது நீ ஏந்தும் ஆழி

எவ்வளவு வலிமையுடையது! இப் பெருமையைப் பெரும் புலவராகிய பரணர் பாடினார். அவரே பாடுவதற்குரியவர்"[1] என்று தம் இன்ப உணர்ச்சியை வெளிப்படுத்தினார்.

இயல், இசை, நாடகம் என்று தமிழ் மூன்று வகைப் படும். இலக்கண இலக்கியங்கள் யாவும் இயல் தமிழைச் சார்ந்தவை. பண்ணும் பண் அமைந்த பாட்டும் இசைத் தமிழைச் சார்ந்தவை. கூத்தும் அதற்கு இனமாகிய வரி முதலியனவும் நாடகத் தமிழைச் சார்ந்தவை. ஔவையார், பரணர் முதலிய பெரும்புலவர்கள் அதிகமானுடைய புகழை அருமையான பாக்களால் பாடினார்கள். அவை இயற்றமிழ்ப் பாடல்கள். வேறு பலர் அதிகமானை இசைத்தமிழ்ப் பாடல்களால் பாடினர். தாளத்தோடும் பண்ணோடும் அமைந்த அந்தப் பாடல்கள் கேட்க இனியனவாக இருந்தன. பண் அமைந்த பாடலை இக் காலத்தில் உருப்படிகள் என்று சொல்கிறார்கள். பழங்காலத்தில் உரு என்றே கூறினர். உரு என்பதி லிருந்து உருப்படி என்பது வந்தது.

அதிகமான் வீரத்தைப் பாடும் பல உருப்படிகளை இசைத் தமிழ் வல்லுநர்கள் பாடினார்கள். அவன் ஈகையைச் சிலர் பாடினார்கள். அவன் குலப் பெருமையைச் சிலர் போற்றினார்கள். இயற்றமிழ்ப் பாடல்களைத் தமிழறிவுடையவர்கள் யாவரும் பார்த்துப் பொருள் தெரிந்து இன்புறலாம். ஆனால் இசைத் தமிழ்ப் பாடல்கள் பொருள் அறிந்து மகிழ்வதோடு நிற்பதற்கு உரியன அல்ல. அவற்றை வாயாரப் பாடி இன்புற வேண்டும். அதிகமானைப் பற்றிய இசைப் பாடல்கள் மிகுதியாக வந்தன. அவற்றை வாங்கி வாங்கி வைத்துக் கொண்டார்களே யன்றி எப்படிப் பாடவேண்டும், அவற்றிற்குரிய பண் எவை என்று தெரிந்து கொள்ளவில்லை.

1. புறநானூறு, 99.

இதை ஒளவையார் உணர்ந்தார். அந்தப் பாடல்களை யெல்லாம் ஒருசேரத் தொகுத்தார். தாம் அறிந்த பெரிய பாண் புலவர் ஒருவரை அழைத்து வரச் செய்தார். அவர் வந்து அந்தப் பாடல்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து, எந்த எந்தப் பண்ணில் அமைத்தால் நன்ருக இருக்குமோ அந்த அந்தப் பண்ணை அமைத்துத் தாமே பாடிக்காட்டினர். அந்தப் பாடல்களைக் கேட்கப் பலர் கூடினர். இயற்றமிழ்ப் புலவரும் இசைத் தமிழ் வல்லுநர்களும் அமைச்சர்களும் சான்ருேர்களும் கூடிய அந்தப் பேரவையில் இயலும் இசையும் கைவந்த ஒரு பெண் மணியும் இருந்தாள். அவளுக்கு நாகை என்று பெயர். அவள் அதிகமான் நெடுமான் அஞ்சியின் அத்தை மகள். அந்தப் பாண்மகளுர் பாடப் பாட அவற்றைக் கேட்டு இன்புற்றுச் சுவைத்தாள் அவள். அந்த இசைப் புலவர் தாமே சில புதிய உருப்படிகளைப் பாடினர். ஏழு சுரங்களையும் உடையவற்றைப் பண் என்றும், அந்தக் கணக்கில் குறைபவற்றைத் திறம் என்றும் சொல்வது இசைத்தமிழ் மரபு. புதிய பாடல்களைப் பாடிய புலவர் சில திறங்களில் அமைத்த உருப்படிகளையும் பாடினர். அவை மற்ற எல்லாப் பாடல்களிலும் சிறந்தனவாக, உள்ளத்தை ஈர்ப்பனவாக அமைந்தன.

அஞ்சியின் அத்தை மகளாகிய நாகைக்கு இந்தத் திறங்களின் இனிமையைப் பாராட்டவேண்டும் என்று தோன்றியது. அவள் தான் பாடிய அகப் பொருட் பாட்டு ஒன்ருல் அந்த விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டாள்.

ஒரு பெண்மணி தன் கணவன் தனக்கு மிகவும் இனியவனுக இருக்கின்ருன் என்று சொல்ல வருகிருள். "அவன் திருமணம் புரிந்துகொண்ட நாளில் எவ்வளவு ஆர்வத்தோடு இனியனுக இருந்தானே அப்படியே இப்போதும் இருக்கிருனு?"

என்று தோழி கேட்கிறாள். "அதைவிட மிக்க இனியவனாக இருக்கிறான். வேகமான ஓட்டத்தையுடைய குதிரையையும் உயர்ந்த தேரையும் உடைய அதிகமான் நெடுமான் அஞ்சியினுடைய நல்ல புகழை நிலை நிறுத்திய, யாவரும் விரும்புதற்குரிய பாடல்களுக்குப் பழைய மரபில் வரும் இசையை அமைத்த புகழ்பெற்ற பாண் புலவன், கணக்குப் பண்ணி அமைத்த பண்களுக்குள்ளே, தானே புதியதாகப் புனைந்து அமைத்த திறங்கள் மிக்க இனிமையுடையன. அவற்றைக் காட்டிலும் இனிமையுடையவன் என் கணவன்" என்று சொல்கிறாள். இந்த உவமை வாயிலாகப் பாண்மகனார் இசை வகுத்த நிகழ்ச்சியைச் சிறப்பித்தாள் நாகை.

*கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி*
*நல்இசை நிறுத்த நயவரு பனுவல்*
*தொல்இசை நிறீஇய உரைசால் பாண்மகன்*
*எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்*
*புதுவது புனைந்த திறத்தினும்,*
*வதுவை நாளினும் இனியனால் எமக்கே.*[1]

[கடும்பரி - விரைவான நடையையுடைய. இசை நிறுத்த-புகழை நிலை நிறுத்திய. நயவரு-விருப்பம் உண்டாகின்ற. பனுவல்-உருப்படிகளின் தொகுதி. தொல் இசை நிறீஇய-பழைய முறைப்படி அமைந்த இசையை வகுத்த. உரைசால்-புகழ்மிக்க. எண்ணுமுறை நிறுத்த-எண்ணின் வரிசையாக வகுத்த. திறத்தினும் இனியன், வதுவை நாளினும் இனியன் என்று தனித்தனியே கூட்டவேண்டும்.]

அதிகமான் அத்தை மகளாகிய நாகையும் அவனைப் பாடிப் பரவினாள்.

---

1. அகநானூறு, 352

# 9. சேரமான் செய்த முடிவு

மலையமான் திருமுடிக் காரி திருக்கோவலூரை விட்டு ஓடியவன், ஒருவரும் அறியாமல் ஓரிடத்தில் இருந்தான். அவனுடைய வீரர்களில் சிலர் அவன் இருக்கும் இடம் அறிந்து அவனோடு சேர்ந்து கொண்டார்கள். யாவரும் வஞ்சிமா நகரை நோக்கிப் புறப்பட்டார்கள். காரியென்னும் குதிரையில் ஏறி விரைவாகச் சென்றான் மலையமான்.

அதிகமான் திருக்கோவலூரை முற்றுகை யிட்டது உடனே பெருஞ்சேரல் இரும்பொறைக்குத் தெரியவில்லை. தெரிந்த பிறகு, அவன் மகிழ்ச்சியே அடைந்தான். காரி, கோட்டை கொத்தளங்களுள்ள தன் ஊராகிய கோவலூரில் இருந்தான். பகைவர் களை அவர்கள் ஊரிலேயே சென்று பொருது அடர்க்கும் பேராற்றல் உடையவன் அவன். அத்தகையவன் தன்னூரில் இருக்கும்போது அவனை யாரால் வெல்ல முடியும்? அதிகமானுக்குக் கேடுகாலம் வந்ததனால்தான் இந்தப் பேதைமைச் செயலை மேற் கொண்டானென்று சேரன் எண்ணினான்.

ஆனால் அவன் நினைத்த வண்ணம் நடக்க வில்லை. அதிகமானே வெற்றி பெற்றான். காரி எங்கே போனான் என்பது தெரியாமல் சேரன் கலங்கினான். காரியையே தோல்வியுறச் செய்த அதிகமான் பெரிய விறல் வீரனாகவே இருக்க வேண்டும் என்று எண்ணினான். காரியைப் பற்றிய செய்தியை ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்துக் கொண்டே இருந்தான். கடைசியில் ஒருநாள் காரியே நேரில் வந்து சேர்ந்தான்.

அவனைக் கண்டவுடன் சேரன், "நான் இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை" என்றான்.

"என் வரவையா?" என்று மலையமான் கேட்டான்.

"உம் வரவை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறேன்."

"பின்னே எதை எதிர்பார்க்கவில்லை?"

"நீர் தோல்வியுறுவீர் என்பதைச் சிறிதும் எதிர் பார்க்கவில்லை. அதிகமான் உம்மிடம் சிக்கிக் கொள் வான் என்றே நம்பினேன்."

"ஆனைக்கும் அடி சறுக்கும் என்னும் பழ மொழிக்கு நான் எடுத்துக்காட்டாகி விட்டேன். கொல்லிக் கூற்றப் போரில், எதிர்பார்த்ததை விட மிகுதியான நாட்கள் போரிடும்படி நேர்ந்தது. அந்த நாட்டினர் ஓரியிடம் பேரன்புடையவர்களாக இருந் தார்கள். ஆகையால் பலர் படையிலே சேர்ந்து போரிட்டார்கள். எங்கள் முழு வலிமையையும் காட்டும்படி நேர்ந்தது. அதனால் என் படைவீரர் கள் களைப்படைந்திருந்தனர். அந்தச் சமயம் பார்த்து அதிகமான் வந்தான். களைத்துப்போன படையை வைத்துக்கொண்டு போரிடும்படி ஆகிவிட்டது. துணைப்படை ஒன்றும் வரவில்லை அல்லவா?"

தான் துணையாகப் படையை அனுப்பவில்லை யென்பதை மலையமான் குறிப்பாகச் சுட்டிக்காட்டு கிறான் என்று சேரமான் தெரிந்துகொண்டான். "எல் லோருக்கும் துணையாகச் சென்று வெற்றியை வாங் கித் தரும் உமக்குப் பிறர் துணை எதற்கு என்று எண்ணிவிட்டேன். சரி, நடந்தது நடந்துவிட்டது. இனிச் செய்ய வேண்டியதையே ஆராயவேண்டும்" என்றான் பெருஞ்சேரல் இரும்பொறை.

"என்ன செய்வது என்பதை நாடு இழந்து நிற் கும் நானா சொல்லவல்லேன்? இத்தகைய அவமானம் என் வாழ்க்கையில் பட்டதில்லை. அதிகமான் முன் நின்று போர் செய்து உயிரை நீத்திருக்கலாம். அந்தச் சமயத்தில் அந்த எண்ணம் தோன்றவில்லை. எனக்கு

என் உயிரே வெல்லமாக இருந்தது'' என்று வருத்தம் ஒலிக்கும் குரலில் பேசினான் காரி.

''உமது வருத்தத்தை நான் நன்றாக உணர்கிறேன்; உம்முடைய ஊக்கமும் வலிமையும் உம்மை விட்டு எப்போதும் நீங்கா. ஆதலின் சோர்வு அடையாமல் இழந்த நாட்டைப் பெற வழி தேடவேண்டும்.''

''இப்போதுதான் எனக்கு நேர்ந்த விளைவுக்குக் காரணம் தெரிகிறது. மன்னர் பெருமானுடைய அவாவை நிறைவேற்ற நான் ஓரியை எதிர்த்துக் கொன்றேன். அது அறமல்லாத செயலாதலின் அதற்குரிய பயனை இப்போது பெறுகிறேன்.''

தனக்காக ஓரியைக் கொன்றதுதான் காரியின் இன்றை நிலைக்குக் காரணம் என்பதைப் பெருஞ் சேரலிரும்பொறை உணரவேண்டுமென்றே இப்படிப் பேசினான் மலையமான். அவ்வரசன் அதை நன்கு உணர்ந்தான். ''எனக்குக் கொல்லிக் கூற்றத்தை ஓரியினிடமிருந்து கைப்பற்றித் தந்த வீரத்தை நான் மறப்பவன் அல்லன். எப்பாடு பட்டாவது உம்முடைய கோவலூரை அதிகமானிடமிருந்து உம்முடைய ஆட்சிக்கு வரச்செய்து பழையபடி உம்மை மலாட்டின் தலைவனாக ஆக்குவேன். நான் சேரர் குலத்தில் தோன்றியது உண்மையாயின் இந்தச் சொல்லை நிறைவேற்றுவேன்'' என்று வீறுடன் வஞ்சினம் கூறினான் சேரன்.

அதைக் கேட்ட காரி உளம் மகிழ்ந்தான்; ''அதிகமானை வெல்லுவது எளிய செயல் அன்று. பெரிய அகழி சூழ்ந்த வலிமையான கோட்டை அவனுக்கு இருக்கிறது. ஆற்றல் மிக்க வீரர்கள் செறிந்த பெரிய படையும் இருக்கிறது. ஆதலின் தீர ஆராய்ந்து வினையை மேற்கொள்ள வேண்டும்'' என்றான்.

''நன்றாகவே ஆராய்ந்து தக்க முறையில் பெரிய படைகளைக் கூட்டி, யாரேனும் துணை வருவாரானால்

அவர்களையும் சேர்த்துக்கொண்டு போரிடலாம். சிறிது காலம் சென்றாலும் அதிகமானை எதிர்க்கும் தகுதி பெற்ற பிறகே போரைத் தொடங்குவோம். ஆனால் ஒன்று மட்டும் சொல்ல விரும்புகிறேன். இனி ஒவ்வொரு கணமும் இந்தப் போரைப் பற்றியே சிந்தித்துக்கொண் டிருப்பேன். இரவில் தூக்கமின்றி இதே கவலையாக இருப்பேன். உம் யோசனைகளை அவ்வப் போது சொல்லி வரவேண்டும்.''

அது முதல் பெருஞ்சேரல் இரும்பொறை போருக்கு ஆயத்தம் செய்யத் தொடங்கினான். அது மிகப் பெரிய போராகவே இருக்கும் என்பதில் அவனுக்குச் சிறிதும் ஐயம் உண்டாகவில்லை. அதற்கு ஏற்றபடி விரிவான வகையில் ஆவன செய்ய முற்பட்டான். தன் படை வீரர்களில் இடையிலே சென்றவர்களை யெல்லாம் அழைத்துவரச் செய்தான். ''அணிமையில் போர் செய்யவேண்டி நேருமாகையால் ஒவ்வொரு குடியிலும் உள்ளவர்களில் வலிமையும் பருவமும் உள்ள ஆடவர்கள் உடனே வந்து படையில் சேரவேண்டும்'' என்று யானையின்மேல் முரசை வைத்து அறையச் செய்தான். அது கேட்ட காளையர் பலர் வந்தனர். படைக்கலக் கொட்டிலில் உள்ள கருவிகளையெல்லாம் செப்பம் செய்வித்தான். படை வீரர்களுக்கு நல்ல முறையில் பயிற்சி அளிக்கக் கட்டளையிட்டான். ''எங்கே போர்? யாரோடு போர்?'' என்பதை மட்டும் யாரும் அறியாமல் மந்தணமாகவே வைத்திருந்தான். ஒற்றர்களை அனுப்பித் தகடூரில் உள்ள அமைப்புக்களையும் படையின் அளவு முதலியவற்றையும் தெரிந்துகொண்டு வரும்படி ஏவினான். ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒன்றைச் செய்துகொண்டே இருந்தான்.

இதற்குள் காரி அங்கங்கே மறைவாகத் தங்கியிருந்த தன் வீரர்கள் சிலரை ஆள் விட்டு அழைத்து

வரச் செய்தான். அவன் வஞ்சிமா நகரத்தில் இருக்கிருன் என்பதை உணர்ந்து பலர் அவனை வந்து அடைந்தார்கள். மீட்டும் போருக்கு ஏற்ற வகையில் தம்மை ஆயத்தம் செய்துகொண்டார்கள், அந்த வீரர்கள் அனைவரும். காரியின் போர் அநுபவமும் தன்னுடைய படையும் அதிகமானை வெல்லப் போதியவை என்று சேரமான் திண்ணமாக எண்ணினன். படை வகுப்பில் பேரணியாக இருப்பதைக் காரி தலைமை தாங்கி நடத்த வேண்டும் என்பது அவன் விருப்பம்.

சேரர் படையில் இருந்த தலைமை வீரர்களில் பிட்டங்கொற்றன் என்பவன் ஒருவன். அவன் குடியே வீரப் பெருங்குடி; சேர மன்னர்களுக்குத் தம்முடைய வலிமையைப் பயன்படுத்தும் பெருவீரர்கள் பிறந்த குலம். பிட்டங்கொற்றன் இளமை மிடுக்கும் போர்ப் பயிற்சியும் உடையவன். தானே தலைமை தாங்கிப் போரை நடத்தும் ஆற்றலை அவன் பெற்றிருந்தான். காரியும் பிட்டங்கொற்றனும் இணைந்துவிட்டால் தீயும் காற்றும் சேர்ந்துகொண்டது போலாகிவிடும். பிறகு அவர்களை எதிர்ப்பதற்கு எவரால் முடியும்? வேறு வீரர்களில் சேரனுடைய அன்புக்குச் சிறப்பாக உரியவரானவர் சிலர் உண்டு. அவர்களில் நெடுங்கேரளன் என்பவன் ஒருவன்; மீசை அரும்பிய முகமும் திரண்ட தோள்களும் எடுப்பான பார்வையும் இரும்புருளையைப் போன்ற வலிமையும் பெற்றவன். போரில் அவனை விட்டால் இடையிலோ கடையிலோ நிற்கமாட்டான். நேரே முன்னணிப் படையிலே போய் நிற்பான்.

இத்தகைய வீரர்களை ஒவ்வொருவராகத் தன் அகக் கண்ணிலே நிறுத்திப் பார்த்தான் சேரன். நெடுங்கேரளனே போதும் போரை வெல்ல; அவனல் இயலாதென்ருல் பிட்டங்கொற்றன் எவ்வளவு பெரும் படை வந்து எதிர்த்தாலும் முன்னின்று பகைவரைச்

சாய்ப்பான்; அவனால் இயலாத செயலே இல்லை. ஒரு கால் அவன் தளர்ச்சியடைவதாக இருந்தால் காரி இருக்கிறான். தமிழ்நாட்டுப் படைகள் அத்தனையும் எதிர்த்தாலும் அஞ்சாமல் எதிர்நின்று மார்தட்டும் வீரன் அவன். அவனுடைய வீரம் இலக்கியத்தில் ஏறியதல்லவா ?

நினைக்க நினைக்கப் பெருஞ்சேரல் இரும் பொறைக்கு ஊக்கம் வளர்ந்தது; துணிவு பிறந்தது; வெற்றி நிச்சயம் என்ற முடிவு ஒளிவிட்டது. செய்ய வேண்டிய ஆயத்தங்கள் பெரும்பாலும் நிறைவேறின. போர் முரசு கொட்டவேண்டியதுதான்.

ஒரு நாள் தன்னுடைய அமைச்சர்களையும் படைத் தலைவர்களையும் சான்றோர்களையும் வைத்துக்கொண்டு மந்திராலோசனை செய்யத் தொடங்கினான். பெருஞ் சேரல் இரும்பொறையிடம் அன்புகொண்டு அவனைப் பாடிய அரிசில்கிழார் என்னும் புலவரும் அங்கே இருந் தார். பெருஞ்சேரல் இரும்பொறை போரிடவேண்டிய காரணத்தை எடுத்துரைத்தான். "அதிகமான் எப் போதும் நமக்குப் பகைவனாக இருக்கிறான். அவ னுடைய குடியே சேரர்களுக்குத் தீங்கு எண்ணும் குடி. தாங்களே சேர மன்னர்களாக முடி கவித்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அதியர் குலத்தினருக்கு இருந்துவருகிறது. அதிகமான் நெடுமான் அஞ்சி வர வரப் பல நாடுகளை வலியச் சென்று போரிட்டுத் தன் ஆட்சிக்கீழ்க் கொண்டுவருகிறான். அவனுடைய செய லால் நாடு இழந்த நல்லவர்கள் பலர்" என்றான்.

"பழையவர்களைப்பற்றி இப்பொழுது எண்ண வேண்டாம். அதிகமானைப் பற்றிச் சொல்லுங்கள்" என்றார் ஒரு பெரியவர்.

"அதிகமான் ஈகையிற் சிறந்தவன், அறிவிற் சிறந்தவன் என்று யாவரும் சொல்கிறார்களே!" என்றார் அரிசில்கிழார்.

"கொள்ளையிட்டு வந்ததைக் கொடுப்பது கொடையாகுமா? எவ்வளவு சிறந்தவனாக இருப்பினும் நாடு பிடிக்கும் ஆசை இருக்கும்வரைக்கும் அவன் கொடியவனே. படைப்பலத்திலே குறைந்தவர்கள், அவன் எந்தச் சமயத்தில் நம்மேல் படையெடுப்பானோ என்று அஞ்சிக் காலம் கடத்துகிறார்கள். அவன் நம் பெருவீரரான காரி ஓய்ந்திருந்த சமயம் பார்த்து அவர் ஊரைத் தாக்கி ஊரை விட்டு ஓட்டிவிட்டானே!"

"காரணமின்றி ஓரியைத் தாக்கிக் கொன்றதற்காகவே அவன் கோவலூரைத் தாக்கினான் என்றல்லா புலவர்கள் பேசுகிறார்கள்?" என்று அரிசில்கிழார் கூறினார்.

"காரி கொல்லிக்கூற்றத்தை வசப்படுத்தாமல் இருந்திருந்தால் என்றேனும் ஒருநாள் அதிகனே கைப்பற்றி யிருப்பான். அந்த நாடு கிடைக்கவில்லையே என்ற பொறாமையினால்தான் காரியின்மேல் சினம் கொண்டு கோவலூரை முற்றுகையிட்டான்."

"ஒரு போரிலிருந்து மற்றொரு போர் தொடங்குகிறது. அதனால் அரசர்களுக்கு நலமோ, தீங்கோ, நாட்டில் வாழும் மக்களுக்குத் தீங்கே உண்டாகிறது. எப்போதும் போர் நடந்தால் மக்கள் எப்படி வாழமுடியும்? கொல்லிப் போர் கோவலூர்ப் போரைக் கொண்டு வந்துவிட்டது. இப்போது கோவலூர்ப் போர் தகடூர்ப் போருக்கு வித்தாக வந்திருக்கிறது. யார் யாரோடு போர் செய்தாலும் பொதுவில் தமிழ்நாட்டில் வாளும் வாளும் வேலும் வேலும் மோதிய வண்ணமாயிருக்கின்றன" என்றார் சான்றோர் ஒருவர்.

"அண்ணன் தம்பிகளுக்குள் நடக்கும் போரை எண்ணுகையில் உள்ளம் சாம்புகிறது. அதிகமான் சேரர் குலத்திலிருந்து பிரிந்துபோன குடியினன். நம் மன்னர்பிரானுக்குத் தம்பி போன்றவன்.[1] அவன்

1. தகடூர் யாத்திரை (புறத்திரட்டு, 776.)

மார்பில் புரள்வதும் சேர மன்னர்களுக்குரிய பனை மாலையே. அவனை இணக்கமாக வைத்து நட்பாடினால் சேர நாட்டுக்கும் நன்மை; தமிழ் நாட்டுக்கும் நன்மை.''—இப்படி வேறு ஒரு சான்றோர் சொன்னார்.

''அவன் சேர குலத்தைக் கண்டால் கனலுகிறான்; அவனைத் தம்பியென்று சொல்வதாவது!'' என்றான் சேரன்.

''தம்பியாகவே இருந்தால் என்ன? தம்பி நல்லவனாக இருந்தால் ஒத்துப் போகலாம். தீயவனாக இருந்தால் அடக்கவேண்டிய முறைப்படி அடக்க வேண்டியதுதான். அண்ணன் தம்பிகள் ஒழுங்காக இருந்தால் பாரதப் போரே வந்திராதே! தம் தம்பிமார் என்று தருமபுத்திரர் பாரதப் போரிலிருந்து விலகிக் கொண்டாரா?'' என்று மிடுக்காகப் பேசினான் பிட்டங் கொற்றன்.

''நன்றாகச் சொன்னாய்!'' என்று அவனைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தான் சேரமான்.

சான்றோர்களும் அரிசில்கிழாரும் போர் எழாமல் இருந்தால் நலமென்று எண்ணியவர்கள். ஆதலின் தங்களால் இயன்ற நியாயங்களை எடுத்துச் சொன்னார்கள். அவர்கள் கூற்று அரசன் காதில் ஏறவில்லை. போருக்குரிய ஆயத்தங்கள் யாவும் ஆகிவிட்டன என்று அவர்கள் உணர்ந்தார்கள். வெள்ளம் வந்தபின் அணைபோட்டுத் தடுக்கமுடியுமா? அரசர்கள் ஒரு செயலில் முனைந்துவிட்டால் அதை மாற்றுவது மிக அரிது.

அந்த அந்தரங்கக் கூட்டத்தில், அதிகமானோடு போர் செய்ய வேண்டியது இன்றியமையாததே என்ற முடிவை அரசன் வற்புறுத்தினான். படைத்தலைவர்கள் தோளைக் குலுக்கி ஆரவாரித்தார்கள். அமைச்சர்கள் தலையை அசைத்தார்கள். படையெடுத்து வரப்போகிறோம் என்று ஓலை அனுப்ப ஆளும் நாளும் தேர்ந் தெடுத்துவிட்டான் சேரன்.

# 10. போரின் தொடக்கம்

அதிகமானுக்குச் சேர மன்னனிடமிருந்து ஓலையைக் கொண்டு சென்றான் ஒரு தூதுவன். திடீரென்று, "உன்மேல்போரிடவருகிறோம்" என்றுசொல்லலாமா? "நம் நண்பராகிய காரிக்கு உரிய திருக்கோவலூரை அவரிடம் ஒப்பிக்கவேண்டும்; இல்லையானால் போருக்கு எழுவோம்" என்று ஓலை கூறிற்று. சான்றோர்கள் கூறிய அறிவுரையை ஒருவாறு ஏற்றுக்கொண்டு, இந்த முறையில் ஓலைபோக்கினான் பொறையன். அதிகமான் திருக்கோவலூரை மீட்டும் காரிக்கு அளித்துவிட்டால் போரே நிகழாமல் போகுமே என்ற நைப்பாசை அந்தச் சான்றோர்களுக்கு. பெருஞ்சேரல் இரும்பொறையோ அதிகமான் பணிந்து வருவான் என்று எண்ணவில்லை. இதுவரையில் தோல்வியையே அறியாமல் வெற்றியிலே வளர்ந்தவன் அவன். அவன் இந்த ஓலையைக் கண்டு, "அப்படியே செய்து விடுகிறேன்" என்று கைப்பற்றிய ஊரைத் திருப்பிக் கொடுக்க முன்வருவானா?

காரணமின்றிப் போரிட்டான் என்ற பழி வாராமல் இருக்கவே, இவ்வாறு ஒரு தலைக்கீட்டை வைத்து ஓலையனுப்பினான் சேரன். 'அதிகமான் இசையமாட்டான்; போர் நடக்கத்தான் போகிறது; நமக்கே வெற்றி கிடைக்கும்' என்று உறுதியாகக் கருதினான்.

தூதுவன் தகடூரை அடைந்தான். அவன் போவதற்கு முன்பே அதிகமானுக்குப் பொறையன் எண்ணம் தெரிந்துவிட்டது. ஒற்றர்கள் சேரன் தலைநகரில் நடைபெறும் போர் முயற்சிகளை அறிந்துவந்து முன்னமே சொல்லியிருந்தார்கள். ஆதலின் பொறையன் போரோடு வருவான் என்று ஒவ்வொரு

நாளும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான் அதிகமான். தூதோலை அவனிடம் வந்தது. படித்துப் பார்த்தான். உடனே அமைச்சர், படைத்தலைவர், சான்றோர்கள் ஆகியவர்களை அழைத்து அவை கூட்டினான். மந்திரச் சூழ்ச்சியில் யாவரும் ஈடுபட்டனர்.

சில பெரியவர்கள் திருக்கோவலூரைக் கொடுத்து விடலாம் என்றார்கள். படைத்தலைவர்கள் அதற்கு இசையவில்லை. கடைசியில் போரையே வரவேற்ப தென்று முடிவாயிற்று. "பாம்பின் வாயில் புகுந்த தேரை மீண்டாலும் மீளும்; அதிகமான் கையில் சிக்கியது மீளாது என்பதைச் சேரன் தெரிந்து கொள்ளட்டும்" என்று விடை அனுப்பிவிட்டான்.

அதிகமான் கோட்டை பரந்து விரிந்த இடத்தை உடையது. மண்ணை அரைத்து வெல்லம், முட்டைப் பசை, வேறு பசைகள் ஆகியவற்றைக் கலந்து குழைத்து அமைத்தது. செம்பினால் செய்ததுபோன்ற வலிமையை உடையது. உறையூர், வஞ்சி, மதுரை என்னும் மாநகரில் உள்ள மதில்களைப்போன்ற சுற்று வட்டம் இல்லாவிட்டாலும் இக்கோட்டை மதில்கள் உறுதியானவை. உள்ளே மேடைகளும், அம்பை மறைவாக நின்று எய்யும் புழைகளும், குவியல் குவியலாக இரும்புத் துண்டுகளையும் வறுத்த மணலை யும் வீசி எறியும்படியான மறைவிடங்களும் இருந்தன.

கோட்டையைச் சுற்றிலும் ஆழமான அகழி யொன்று இருந்தது. அதன்மேல் வேண்டியபோது போடவும் போர் வந்தால் எடுத்துவிடவும் எளியன வாகப் பாலங்கள் இருந்தன. அகழியில் முதலைகளை விட்டு வளர்த்து வந்தார்கள். எவ்வளவு வலிமை இருந்தாலும் அகழியைத் தாண்டுவது அரிது. ஏதேனும் தந்திரம் செய்து அதைக் கடந்தாலும் மதிலின்மேல் ஏற முடியாது. மதில் வாயிற்

கதவுகளோ வைரம்பாய்ந்த மரத்தால் ஆனவை. இரும்புத் தகடுகளாகிய போர்வையை உடையவை. மதிற் கதவுகளை யானைகளைக் கொண்டு முட்டி மோதித் திறப்பது பழங்காலப் போர் முறை. தம் கொம்புகளால் குத்தியும் மத்தகத்தால் மோதியும் யானைகள் கதவுகளை உடைக்கப் பார்க்கும். இந்த முறையில் தகடூரில் உள்ள கோட்டைக் கதவுகளைச் சிதைப்பது இயலாத செயல்.

அன்றியும் கோட்டையில் மற்றொரு வசதி இருந்தது. கோட்டையிலிருந்து வெளியே யாரும் அறியாமல் வரும்படியாக நிலத்துக்கு அடியில் ஒரு சுருங்கை வழி இருந்தது. அப்படி ஒன்று உண்டு என்பதை அதிகமானும் அவனுக்கு மிகவும் வேண்டிய சிலருமே அறிவார்கள். அவனுடைய மனைவிக்கும் தெரியும். ஏதேனும் தீங்கு கோட்டைக்குள் நேர்ந்து, வாயிலும் அடைபட்டிருந்தால் அந்தச் சுருங்கையின் வழியாக வெளியேறி விடலாம். எதிர்பாராதபடி கோட்டைக்குள் தீப் பற்றிக் கொண்டால் அது பயன்படும்.

அதில் எப்போதும் போக்குவரத்து இருந்து கொண்டிருந்தால்தான் சமயத்துக்கு உதவுமென்று அதிகமான் அறிவான். ஆதலின், அவன் ஒன்று செய்தான். அடிக்கடி கோட்டை வாயில் சாத்திப் பூட்டப் பெற்ற நள்ளிரவில் அச் சுருங்கை வழியே புறப்பட்டுச் சென்று புறத்தே இருந்த நகரில் மாறுவேடத்தில் உலா விவிட்டு வருவான். இதனால் நகர் சோதனையும் சுருங்கைச் சோதனையும் ஒருங்கே நிகழ்ந்தன.

போர் வரப் போகிறது என்பதை முன்கூட்டியே தெரிந்துகொண்ட அதிகமான் தன் கோட்டையின் ஒவ்வோர் அங்குலத்தையும் கவனித்துச் செப்பஞ் செய்யலானான். அகழியின் கரைகளைச் சரிப்படுத்தினான். மதிலில் சிதைந்த பகுதிகளைக் கட்டுவித்தான். மற்றப் பகுதிகளைப் பின்னும் உறுதியாக்கினான். மதிலின் மேல்

உள்ள பொறிகளைச் சீர்ப்படுத்தினான். அம்பு எய்யும் எப் புழைகளைத் தடை ஏதும் இல்லாமல் அமைக்கச் செய் தான். கோட்டைக்குள் இருந்த படை வீரர்களைப் போருக்கு ஆயத்தம் செய்யச் செய்தான். கோட்டைக் குள் இன்றியமையாதவர்களை மாத்திரம் வைத்துக் கொண்டு மற்றவர்களை வெளியிலே நகரத்தில் போய் இருக்கச் சொன்னான். நகரில் இருந்த வீரர்களையும் படைக்கலப் பயிற்சியுடைய மைந்தர்களையும் அழைத் துக் கோட்டைக்குள்ளே இருக்கும்படி ஏவினான்.

பெருஞ்சேரல் இரும்பொறை படை எடுத்துவந் தால் எதிர் சென்று போரிட்டு அவனை ஓட்டுவதை அதிகமான் விரும்பவில்லை. அதற்குப் பெருமுயற்சி வேண்டும். தன் நாட்டுக்கு வெளியிலோ அல்லது உள்ளேயோ ஒரு போர்க்களம் உருவாகும். கைகலந்து போர் செய்யத் தொடங்கினால் பலர் மடிவார்கள். இவற்றிற் கெல்லாம் இடமின்றிப் பெட்டிக்குள் அடங் கிய பாம்புபோல் கோட்டைக்குள் இருந்தால், சேரன் வந்து கோட்டையை முற்றுகையிடுவான். மதிற்பொறி களையும், மறைவிடத்திலிருந்து அம்புகளையும் ஏவி அந்தப் படைக்குச் சேதம் விளைவிக்கலாம். பகைப் படை களால் அகழியைத் தாண்டவோ கோட்டையைக் குலைக் கவோ இயலாது. சில காலம் முற்றுகை யிட்டுவிட்டுச் சோர்வடைந்து சேரன் தன் நாட்டுக்கே மீண்டு விடு வான்.—இவ்வாறு தன் மனத்துள் ஒழுங்கு பண்ணிக்கொண்டான் அதிகமான்.

வந்த படை நெடுங்காலம் விட்டு அகலாமல் கோட் டையைச் சூழ்ந்து முற்றுகை யிட்டிருந்தால் என்ன செய்வது என்ற கவலை அவனுக்கு இல்லை. இரகசிய மாகச் சுருங்கை வழியே உணவுப் பண்டங்கள் வருவ தற்கு ஏற்பாடு செய்யலாம் என்ற நம்பிக்கை இருந்தது. சான்றோர்கள் இந்தக் கருத்துக்கு இசைந்தார்கள்.

உயிர்ச் சேதம் கூடியவரையில் குறையவேண்டும் என்பதுதானே அவர்களுடைய கொள்கை?

கோட்டைக்கு வெளியே ஊர் விரிந்திருந்தது. பல வீதிகள் இருந்தன. நகர மக்களையெல்லாம் அழைத்து, போர் அணிமையில் வர இருப்பதைக் கூறினான் அதிகமான். முக்கியமான தலைவர்களை அழைத்து இன்ன இன்னபடி நடந்துகொள்ள வேண்டும் என்றான்.

அதிகமான் தனக்கு அவசியமாக இருந்தால் வேண்டிய மன்னர்களைத் துணையாகக் கூட்டிக்கொள்ளலாம் என்று கருதினான். சோழ மன்னனுக்கும் பாண்டியனுக்கும் ஆள் அனுப்பினான். பெருஞ்சேரல் இரும்பொறை போருக்கு வரபோகிறானென்றும், தான் கோட்டையிலிருந்தபடியே போர் செய்யப் போவதாகவும் தெரிவித்தான். 'கோட்டைக்குள் இருக்கும் வரைக்கும் எங்களுக்கு ஊறுபாடு யாதும் நேராது. ஒருகால் கோட்டைக்கு வெளியே வந்து போரிட வேண்டிய நிலை வந்தால் அப்போது உங்கள் உதவியை எதிர்பார்ப்பேன்' என்றும் எழுதியனுப்பினான். ஒளவையார் தூது சென்று நட்பு உண்டாக்கிய தொண்டைமானுக்கும் இப்படி ஓர் ஓலை போக்கினான். அவர்களிடமிருந்து இசைவான விடையே வந்தது. பாண்டிய சோழ மன்னர்களுக்குச் சேரனிடம் நட்பு இல்லை. ஆதலின் இந்தப் போர் பெரிதானால் தாமும் சேர்ந்து இரும்பொறையை வீழ்த்த வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள்.

அதிகமான் கோவலூரை விட முடியாது என்று சொல்லி அனுப்பியதைப் பொறையன் அறிந்தான். "போருக்கு வா!" என்று அழைத்த அழைப்பாகவே அவன் அதை ஏற்றுக்கொண்டான். படை, வஞ்சியை விட்டுப் புறப்பட்டது.

அதிகமான் படையை எப்படி எப்படி வகுக்க வேண்டுமென்பதைத் தன் படைத் தலைவர்களுக்குச்

சொன்னான். கோட்டைக்குள் இருந்து பகைவர்கள் மேல் அம்பும் பிற படைகளும் வீசி ஓடச் செய்ய, இன்னதை இன்னபடி செய்யவேண்டும் என்று திட்டம் வகுத்தான். அவசியத்தினால் கோட்டையை விட்டு வெளியே வரவேண்டுமானால் அப்போது இன்னது செய்யவேண்டும் என்பதையும் வரையறை செய்தான். சேர மன்னன் படை புறப்பட்டுவிட்டது என்பதை ஒற்றரால் அறிந்தவுடன், எவ்வளவு உணவுப் பொருளைக் கோட்டைக்குள் சேமித்து வைக்கலாமோ, அவ்வளவையும் வைத்துக்கொண்டான். அகழியினுள் பாலங்களை யெல்லாம் உள்வாங்கச் செய்தான். கோட்டைக் கதவுகளை மூடித் தாழிடச் சொன்னான்.

சேரன் படை வேகமாக வந்தது; யானைப் படையை முன்னாலே விட்டுப் பின்பு குதிரைப் படையை விட்டார்கள். அப்பால் தேர்ப்படை சென்றது. கடைசியில் காலாட்படை கடல்போலத் திரண்டு நடந்தது.

சேரன், அதிகமான் நாட்டுக்குள் வந்துவிட்டான். யாரும் அவனை எதிர்ப்பார் இல்லை. திடீரென்று எங்கிருந்தாவது படை வந்து தாக்குமோ என்று எதிர்பார்த்தான். ஒன்றும் வரவில்லை. தன் படை வருவதை முரசடித்துத் தெரிவித்தும் யாரும் எதிர்ப்படாததைக் கண்டு சேரன் வியந்தான். 'ஒருகால் சமாதானம்செய்து கொள்ள விரும்புகிறானோ?' என்றுகூட நினைத்தான். நாட்டுக்குள் படை நடந்துகொண்டிருந்தது. நாட்டு மக்கள் அவர்களை எதிர்கொள்ளவில்லை. போவதற்கு இடம் கொடுத்து விலகி யிருந்தார்கள்.

படை தகடூரை அடைந்துவிட்டது. அதிகமான் கோட்டைக்குள் இருக்கிறான் என்பதை உணர்ந்தான் சேர மன்னன். யானைப் படைகளைக் கொண்டு கோட்டையைத் தாக்கவேண்டும் என்று தீர்மானித்தான். கோட்டைக்குமுன் அகழி இருந்தது. அதைத் தாண்டிச்

சென்ருல் தானே கோட்டையைத் தாக்கலாம்? கோட்டையோடு ஒட்டி ஆழமாக இருந்தது அகழி. கோட்டை மதிலுக்கும் அதற்கும் இடையே வெளி யிருந்தால் அங்கே நின்று கோட்டையை இடிக்கலாம். அதற்கும் வழியில்லை. கோட்டை வாயில்கள் உள்ள இடங்களில் புதிய பாலங்களை அமைத்துச் சென்று யானைகளைக் கொண்டு கதவுகளை மோதிச் சிதைக்கலாம். பாலம் போட என்ன வழி? பெரிய பெரிய மூங்கில் களைக் கொண்டுவந்து போட்டுப் பாலம் கட்டவேண் டும் அதற்கு நேரம் ஏது? மூங்கில்களுக்கு எங்கே போவது?

'அகழி ஒன்று இருப்பது நமக்கு நினைவு இல்லா மற் போயிற்றே!' என்று அவன் வருந்தினன். கோட் டையை முற்றுகை யிடும்படி நேரலாம் என்பதையே அவன் எண்ணிப் பார்க்கவில்லையே! நேருக்கு நேர் போர்க்களத்தில் கை கலப்பதாகவே அவன் கற்பனை செய்திருந்தான். கோட்டை மதிலின் உயரத்தைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச் செறிந்தான். கீழ் இருந்தபடியே சில அம்புகளை எய்யச் சொன்னன்.

அடுத்த கணம் உள்ளே இருந்து சோனமாரியாக அம்புகள் வந்து விழுந்தன. ஏப்புழைகளின் பின்னி ருந்து வீரர்கள் குறி பார்த்து அடித்தமையால் அம்பு கள் சேரமான் யானைகளின்மீது வந்து தைத்தன. கோட்டையிலே பாதுகாப்பாக இருந்தார்கள் அதிக மான் வீரர்கள். அயலான் ஊரில் திறந்த வெளியில் இருந்தனர் சேரமான் படை வீரர்கள். முதலை தண் ணீரில் இருந்தால் அதை யாரும் வெல்லுவது அரிது; யானையையும் இழுத்துவிடும். அது கரையில் வந் தாலோ எளிதிலே கொன்றுவிடலாம். அதிகமான் தண்ணீரில் இருந்த முதலையைப் போல இருந்தான். பெருஞ்சேரல் இரும்பொறையோ தரையிலே கிடந்த முதலை ஆனன்.

புறத்திலிருந்து விடும் அம்புகள் உள்ளே போய் விழுமே யன்றிக் குறி பார்த்து அடித்தால் தைப்பது போலத் தைக்குமா? சேரமான் வீரர்கள் அம்பை மதிலுக்குள் விட்டுக்கொண்டே இருந்தார்கள். உள்ளே இருந்தவர்களும் அம்பை எய்தார்கள்; சுடுமணலை வீசி விட்டார்கள்; இரும்புக் குண்டுகளை இறைத்தார்கள்; ஈட்டி முதலிய கூரிய படைக் கலங்களையும் மதிலின் மேல் இருக்கும் மேடையில் மறைந்திருந்து வீசினார்கள்.

அகழியை நெருங்காமல் விலகி நின்றார்கள் சேரன் படை வீரர்கள். அணுகினால் மேலிருந்து வந்த அம்புகளும் பிற படைகளும் அவர்களைக் கொன்றன. ஆதலால் விலகியிருந்து அம்பை எய்தார்கள். யானை முதலியவற்றைப் பின்னுக்கு நகர்த்தி வில் வீரர்கள் முன்னணியில் நின்றார்கள். அவர்கள் கவசம் அணிந்து கையில் கேடயத்தையும் வைத்திருந்தமையால், வரும் அம்புகளைத் தாங்க முடிந்தது.

"சான்றோர்கள் கூறியதைக் கேளாமல் வந்தது தவறு" என்று இரும்பொறை தன்னைத்தானே நொந்து கொண்டான். ஊருக்குப் புறம்பே ஓரிடத்தில் படை பாளையம் இறங்கியிருந்தது. முதல் நாள் இரவு சேரன் தன் பாசறையில் அமர்ந்திருந்தான். மலையமான் திருமுடிக்காரி, பிட்டங் கொற்றன், நெடுங்கேரளன் முதலிய படைத்தலைவர்கள் உடன் இருந்தார்கள்.

"எத்தனை காலம் புறத்தில் நின்று போர் செய்தாலும் அதிகமானை வெல்ல முடியாதுபோல் இருக்கிறதே! நாம் விடும் அம்புகள் யாவுமே வீணாகின்றன. அவர்கள் அம்புகளோ நம் யானைகளையும் குதிரைகளையும் மாய்க்கின்றன; வீரர்களையும் புண்படுத்துகின்றன. முதல் நாளிலேயே இந்தத் தடுமாற்றம் வந்தால் மேலே எப்படிப் போரை நடத்துவது?" என்று தளர்ச்சியைப் புலப்படுத்தும் குரலோடு பேசினான் சேரன்.

"நம்முடைய ஒற்றர்கள் இந்த அகழியையும் கோட்டையையும் பற்றித் தெரிந்துகொண்டு வந்து சொல்லவில்லையோ?" என்று ஒரு படைத் தலைவன் கேட்டான்.

"அகழி இருக்கிறது, கோட்டை இருக்கிறதென்று கூறினார்கள். நான் அவற்றை நெஞ்சிலே பதித்துக் கொள்ளவில்லை. அவனுடைய நாட்டுக்குள்ளே புகுவதற்கு முன்பே நம்மை எதிர்ப்பான் என்று எண்ணினேன். அவன் படையைச் சூழ்ந்துகொண்டு எளிதிலே அடிப்படுத்தி விடலாம் என்று மனப்பால் குடித்தேன். இப்படி ஒரு நிலை நேரும் என்பதை எண்ணிப் பார்க்கவில்லை. அகழி மலைப்பாம்பு போலக் குறுக்கிடுவதை நான் எண்ணியிருந்தால் வேலையும் வாளையும் தொகுக்கும்போதே மலைநாட்டு மூங்கில்களையும் தொகுத்திருப்பேனே!" என்று அங்கலாய்த்தான் சேரன்.

"இப்போது மலைநாட்டிலிருந்து மூங்கில்களை வருவிக்க இயலாதா?"

"அதற்கு அங்கே ஆட்கள் இருந்து வெட்டி அனுப்ப வேண்டும். மூங்கில்களை வண்டியில் போட்டு வந்தால் இங்கே வர எவ்வளவோ காலம் ஆகும். அதுவரையில் நாம் இங்கே கையைக் கட்டிக்கொண்டு இருக்க முடியுமா? மேலிருந்து வரும் அம்பினால் புண்பட்டுக்கொண்டே இருக்கலாமா?"—சேரன் வஞ்சிமா நகரத்தில் பேசிய பேச்சுக்கும் இதற்கும் எத்தனை வேற்றுமை! அப்போது எத்தனை மிடுக்காகப் பேசினான்! அவன் குரலில் இப்போது சோர்வு தட்டியது.

"மன்னர்பிரான் இவ்வாறு மனம் இழந்து பேசுவது தகாது. தாங்களே இப்படிப் பேசினால் படைவீரர்களுக்கு உள்ள ஊக்கம் தளர்ந்துவிடும். இன்றுதான் போரைத் தொடங்கியிருக்கிறோம். நமக்கு ஒன்றும் பெரிய தீங்கு நேர்ந்துவிடவில்லை. மேலிருந்து வரும் படையினால் துன்பம் நேராத வகையில் நம்மை நாம்

காத்துக் கொள்வதுதான் இப்போது முதல் வேலை. அது எளிதேயன்றி அருமையான காரியம் அன்று. எல்லாப் படைகளும் அங்கே போய் நிற்க வேண்டியதும் அவசியம் அன்று.''—இவ்வாறு காரி கூறினான்.

''ஏன்?''என்று தலை நிமிர்ந்து கேட்டான் சேரன்.

''அதிகமான் படைகள் நேருக்கு நேர் நின்றால் அப்போது நம் படைகள் முழுவதையும் எதிரே நிறுத்த வேண்டும். இப்போது சரியான முறையில் போரா நடக்கிறது? அவன் உள்ளே பாதுகாப்பாக இருக்கிறான். நாம் வெளியிலே நிற்கிறோம். சில படை வீரர்களைக் காவலர்களைப் போலக் கோட்டையைச் சுற்றி நிறுத்தினால் போதும். உடம்பு முழுவதும் மூடும் கவசங்களை அணிந்து அகழியினின்றும் நெடுந்தூரம் தள்ளி நின்றால், மேலிருந்து வரும் படைக்கலங்களால் ஒன்றும் செய்ய இயலாது. நாம் போரை இன்னும் தொடங்கவே இல்லையே!'' என்று காரி கூறினான்.

''பொறியில் அகப்பட்ட எலியைக் கண்டு வெளியில் வரட்டும் என்று பார்த்து நிற்கும் நாயைப் போல நாம் இருக்க வேண்டும் என்று சொல்கிறீரா?'' என்று சேரமான் கேட்டான்.

''அந்த உவமை ஒரு விதத்தில் பொருத்தமானது தான். உள்ளே இருப்பவனை வெளியிலே இழுத்துவர ஏதாவது வழி உண்டானால் செய்யலாம். இல்லையானால், இந்தக் கோட்டையையும் அகழியையும் சூழ்ந்து நின்று காவல் செய்வதுதான் இப்போது செய்யக் கூடியது.''

காரி கூறுவது நடைமுறைக்கு ஏற்றதென்பதைச் சேரமான் உணர்ந்தான். அத்தனை படைகளையும் குவித்துக்கொண்டு கோட்டையை அண்ணாந்து பார்த்துக் கொண்டே நிற்பது பேதைமை என்பது அவனுக்குத் தெளிவாயிற்று. காரியின் சொற்களை ஏற்றுக்கொண்டான்.

# 11. முற்றுகை

கோட்டையைச் சுற்றி இப்போது கூட்டமான படைகள் நிற்கவில்லை. யாவரும் பாசறையிலே இருந்தார்கள். சில வீரர்களே வில்லும் அம்புமாகக் கவசத்தை அணிந்துகொண்டு கோட்டையைச் சூழ நின்றார்கள். காரியோ, பிட்டங் கொற்றனோ குதிரையின் மேல் ஏறிக் கொண்டு கோட்டையைச் சுற்றிவந்து அங்கங்கே நின்ற வீரருக்கு ஊக்கம் அளித்துவந்தனர். அங்கே நின்ற வீரர்களையன்றி மற்றவர்கள் பாசறையில் விருந்துண்டு களித்தார்கள்; கதை பேசி இன்புற்றார்கள். யானைகளுக்கும் குதிரைகளுக்கும் ஒரு வேலையும் இல்லை. காவல் வீரர்கள் மாத்திரம் மாறி மாறி நின்றார்கள்.

ஐந்து நாட்கள் இப்படியே கழிந்தன. எந்த விதமான மாற்றமும் உண்டாகவில்லை. அதிகமான் உள்ளே இருந்தான். சேரன் வெளியிலே இருந்தான். போர் நடப்பதாகவே தோன்றவில்லை.

மறுபடியும் சேரமான் படைத்தலைவர்களோடு ஆராய்ந்தான். "இப்படியே ஒவ்வொரு நாளும் போய்க் கொண்டிருந்தால் என்ன செய்வது? நாம் அயல் நாட்டில் அதிகமான் வெளியே வருவானென்று காத்துக்கிடக்கிறோம். நம்முடைய அரண்மனை வாயிலில் தம் குறைகளைக் கூறக் காத்துக்கிடக்கும் குடிமக்களைப் போலவே இருக்கிறோம். அதிகமானோ உள்ளே இனிமையாக உறங்குகிறான். இப்படியே இருந்தால் நம் எண்ணம் என்னாவது?"—சேரமான்தான் பேச்சைத் தொடங்கினான்.

"அதிகமான் வெளியிலே வந்தால் இரண்டுநாள் நம்மோடு எதிர் நிற்க முடியாது" என்றான் நெடுங் கேரளன்.

"வெளியே வந்தால் என்றல்லவா சொல்கிறாய்? அத்தைக்கு மீசை முளைத்தால் சிற்றப்பா என்பதுபோல இருக்கிறதே!" என்று சேரன் கூறும்போது அவன் உள்ளத்தில் இருக்கும் பொருமல் வெளியாயிற்று.

"பிட்டங் கொற்றனார் கருத்து என்ன?" என்று காரி கேட்டான்.

"பெரியவர்களாகிய நீங்கள் இருக்கும் போது எனக்கு என்ன தெரியும்?"

"இல்லை, உன்னுடைய கருத்தைச் சொல் அப்பா" என்றான் சேரன்.

"நாம் இங்கே வந்து ஐந்தே நாட்கள் ஆயின. இது நீண்டகாலம் அன்று. இன்னும் சில நாட்கள் இப்படியே முற்றுகையை நடத்திக்கொண்டிருப்போம். எவ்வளவு காலம் அவர்கள் உள்ளே இருப்பார்கள்?" என்றான் அவன்.

"மாதக் கணக்காக இருந்தால் என்ன செய்வது?" என்று நெடுங்கேரளன் கேட்டான்.

"இருக்கலாம். ஆனால் அவர்கள் பசியா வரம் பெற்றிருக்கவேண்டும். உள்ளே சில நாட்களுக்கே உரிய உணவைச் சேமித்து வைத்திருப்பார்கள். அது தீர்ந்ததென்றால் அதிகமான் கோட்டைக் கதவைத் திறக்கத்தானே வேண்டும்?" என்றான் பிட்டங் கொற்றன்.

பிட்டங் கொற்றன் கூறியது பொருளுடையதாகப் பட்டது சேரனுக்கு. "ஆம்; அதுவும் ஒருவாறு கருதத் தக்கதுதான்" என்றான் மன்னன்.

"நம்மிடமும் ஓரளவுதானே உணவுப் பொருள்கள் இருக்கின்றன?" என்று ஒரு கேள்வி போட்டான் நெடுங்கேரளன். அவன் ஆண்டில் இளையவன்; மிக்க அனுபவம் இல்லாதவன்.

அரசன் சிரித்துக்கொண்டான். "உனக்கு உணவுப் பஞ்சம் வராது; நீ அஞ்சவேண்டாம். நாம்

வெளியிலே நிற்கிறோம். சேரநாட்டிலிருந்து உணவுப் பொருளை நாம் வருவித்துக் கொள்ளலாம். உள்ளே இருப்பவர்களுக்கு வெளியிலிருந்து சென்றாலன்றி வழி இல்லை. கோட்டையைத் திறந்தால்தானே வெளி உணவு உள்ளே செல்லும்?''

நெடுங்கேரளன் தலையைக் குனிந்துகொண்டான். பிட்டங் கொற்றன், ''உணவுப்பொருளை நம் நாட்டிலிருந்து வருவிப்பதற்கு முன்னரே, மூங்கில்களையும் வருவிக்க வேண்டும். அவை வந்துவிட்டால் நாம் பாலம் போட்டுக் கோட்டையைத் தகர்க்க முயற்சி செய்யலாம்'' என்றான்.

''உம்முடைய யோசனை என்ன?'' என்று மன்னன் காரியை நோக்கினான்.

''மூங்கில் பாலம் போட்டுப் போரிடுவது எளிதன்று. கோட்டையை அணுகினால் அவர்கள் மேலிருந்து பாறையை உருட்டி விடுவார்கள். அவர்களைப் பட்டினி போட்டு வெளியிலே வரச் செய்வதுதான் தக்கதென்று தோன்றுகிறது.''

காரியின் சொற்கள் எப்போதுமே ஆழ்ந்த சிந்தனையின் விளைவாக வருபவை என்பதை அரசன் உணர்ந்தான்; மற்றவர்களும் உணர்ந்தார்கள். அவன் கூறியபடியே முற்றுகையை நீட்டித்தார்கள்.

பத்து நாட்கள் ஆயின; இருபது நாட்கள் ஆயின. சேரன் பொறுமையை இழந்தான். ''நான் வஞ்சிமா நகர் செல்கிறேன். நீங்கள் இருந்து போரை நடத்துங்கள்'' என்றான்.

காரி உடனே பேசினான்: ''அப்படிச் செய்வது தவறு. அரசர் பெருமான் இப்போது இங்கிருந்து போய்விட்டால் அது தோல்வியை வரவேற்பதுபோல ஆகிவிடும். படை வீரர்களுக்கு ஊக்கம் குறையும். எதற்காகத் தாங்கள் போகிறீர்கள் என்பதை அவர்கள் தெளிய மாட்டார்கள்; ஐயம் அடைவார்கள். காத்தது

காத்தோம்; இன்னும் சில காலம் பார்க்கலாம். முன் வைத்த காலைப் பின் வைப்பது வீரம் அன்று.'' இவ்வாறு அவன் சொன்னதை மறுத்துப் பேசச் சேரனால் இயலவில்லை.

உள்ளே அதிகமான் நிலை என்ன என்பதைப் பார்க்கலாம். வெளியிலே படைகள் தொகுதியாக நிற்கவில்லை யென்பதை அவன் கண்டான். சேரனுடைய கருத்து அவனுக்குத் தெளிவாயிற்று. சேரன் எத்தனை காலம் வெளியிலே நின்றிருந்தாலும் அதுபற்றி அவனுக்குக் கவலை இல்லை. தன் அரண் மனையில்தானே அவன் இருந்தான்? ஒரு மாத காலத்துக்கு வேண்டிய உணவு அவனுக்கு இருந்தது. அதற்கு மேலும் உணவுப் பொருளை வெளியிலிருந்து வருவிக்கும் வழி அவனுக்குத் தெரியும்; யாரும் அறியாத சுருங்கை வழி இருக்கவே இருக்கிறது.

உள்ளே அதிகமான் வீரர்களுக்கு ஊக்கம் ஊட்டிக் கொண்டிருந்தான். அவனுடைய படையின் பெரிய தலைவனுக்குப் பெரும்பாக்கன் என்று பெயர். அவனுக்குப் படைக்கலங்களை உதவிப் போர்க்குரிய பொற்பூவை அணிந்து சிறப்புச் செய்தான்.[1] தன் னுடைய வீரர்களை யெல்லாம் வயிறாரச் சாப்பிடச் சொன்னான். அவர்களுடன் தானும் அமர்ந்து உண்டான்.[2] இத்தகைய செயல்கள் வீரர்களுக்கு அதிகமான்பால் இருந்த அன்பைப் பன்மடங்கு மிகுதியாக்கின.

தோள் தினவெடுத்த வீரர்களுக்குப் பகைப் படை களுடன் எதிர்நின்று தம்முடைய வீரத்தைக் காட்டும் வாய்ப்பு வரவில்லையே என்ற ஏக்கம் உண்டாயிற்று. திருமணத்தில் ஒன்றுகூடி விருந்துண்பது போல அல்லவா அவர்கள் உண்டு களிக்கிறார்கள்?

---

1. தகடூர் யாத்திரை (தொல். புறத். 63, உரை)
2. தகடூர் யாத்திரை (புறத்திரட்டு, 1258.)

ஔவையாரும் கோட்டைக்குள் இருந்தார். அதிகமானுடைய பொழுது இனிமையாகக் கழிவதற்குக் கேட்க வேண்டுமா ? கதவைத் திறந்துகொண்டு வெளியிலே சென்று போர் செய்வதாக இருந்தால் தான் அவனுக்கு வேலை இருக்கும். இப்போது ஒரு வேலையும் இல்லை. புறத்திலே இருப்பவர்கள் மதிலைக் குலைத்துக்கொண்டு உள்ளே வந்தால் அப்போது கடும் போர் மூளும்; அவனுக்கு வேலை இருக்கும். அது நடக்கக்கூடியதா ?

சில சிறிய படைத் தலைவர்கள், "எத்தனை காலம் இப்படியே வெட்டிச்சோறு தின்றுகொண்டு கிடப்பது ?" என்று பேசிக் கொண்டார்கள்.

"கதவைத் திறந்துவிட்டுப் போர்க்களத்திலே குதித்துச் சேரன் படைகளை உழக்கிக் குலைத்து ஓட்டி விடலாம். நம் அரசர்பெருமான் எதற்காக அடைத்துக் கிடக்கிருரோ, தெரியவில்லை" என்றனர் சிலர்.

"வெற்றியோ தோல்வியோ, விரைவில் முடிவு காணுவதுதான் நல்லது. இப்படியே நாம் இருந்தால் நம் படைக்கலங்கள் துருப்பிடித்துப் போய்விடும்; நம் வலிமையும் துருவேறிவிடும்" என்றனர் சிலர்.

அவர்கள் பேசிக்கொள்வதை ஒருவாறு அதிகமான் உணர்ந்தான். ஔவையாரோடு உரையாடிக் கொண்டிருந்தபோது, "இப்போதே கதவைத் திறந்து கொண்டு, ஆட்டுமந்தையில் புலி பாய்வதுபோல நாம் சேரன் படைமேல் பாயவேண்டுமென்று சில இளமை முறுக்குடைய வீரர்கள் பேசிக்கொள்கிருர்களாம். பொறுத்திருக்க வேண்டுமென்று அவர்களுக்கு நீங்கள் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

அன்று யாவரும் ஒன்ருக இருந்து உண்ணும் போது ஔவையார் வந்தார். எல்லோரையும் பார்த்தார். அதிகமான் சொன்னபடி செய்தார். வீரர்களுக்கு நல்லுரை பகர்ந்தார் :

"நம்முடைய மன்னனுடைய பெருமையை நாளுக்கு நாள் மிகுதியாக உணர்ந்து பெருமிதம் அடைகிறேன். உணவுப் பொருள் இருந்துவிட்டால் எல்லோருக்கும் விருந்தளித்துத் தானும் உடன் உண்ணும் இயல்பை உடையவன் அவன். இப்போது உங்களுக்கு வேண்டிய உணவை அளிக்கிறான். மற்ற நாட்களில் என்னைப்போல வந்து இரப்பவர்களுக்கு எல்லையின்றிக் கொடுக்கிறான். நீங்கள் பெறுவதைவிட மிகுதியாகப் பெறுகிறவர்கள் அந்த இரவலர்களே. தான் அறிவிற் சிறந்தவனானாலும் அறிவு இல்லாதவர்களையும் இரங்கி ஆதரிக்கிறான். உயிர்க் கூட்டத்தின்பால் அவனுக்கு இருக்கும் கருணை அளவு கடந்தது."

அந்தப் பெருமாட்டியார் இப்போது இதைச் சொல்ல வந்தது எதற்காக என்று பலர் எண்ணினார்கள். ஏதோ இன்றியமையாத செய்தியைச் சொல்லத்தான் அவர் முன்னுரை விரிக்கிறார் என்று படைத் தலைவர்கள் உய்த்துணர்ந்தார்கள். ஔவையார் உரையைத் தொடர்ந்தார் :

"கருணை மிகுதி காரணமாக, அதிகமான் உடனே வெளியிலே சென்று போர்க்களத்தை உண்டாக்கத் துணியவில்லை. வீரம் இன்மையினாலோ, அச்சத்தாலோ அவன் கதவுகளைச் சாத்திக்கொண்டு இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை."

கதவைத் திறக்கவேண்டும் என்று பேசிக் கொண்டிருந்தவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள். ஏதோ குற்றம் செய்தவர்களைப் போன்ற நினைவினால் தலையைத் தாழ்த்திக் கொண்டார்கள். தமிழ்ப் பெருஞ் செல்வியார் தம் பேச்சை முடிக்கவில்லை ; பின்னும் பேசலானார் :

"நெருப்பை உண்டாக்க மரத்தைக் கடைய வேண்டும். அதற்கென்று தீக்கடைகோல் இருக்கிறது.

கடைகோலை வீட்டின் இறப்பிலே செருகி யிருப்பார்கள். அதைப் பார்த்தால், அதன் இயல்பு தெரியாதவர்களுக்கு என்னவோ கோல் என்று தோன்றும். ஆனால் எப்போது நெருப்பு வேண்டுமோ அப்போது அதை எடுத்துக் கட்டையைக் கடையத் தொடங்குவார்கள். கடையக் கடைய நெருப்புப் பிறந்து கொழுந்துவிடும். அப்போதுதான் அந்தக் கோலின் பெருமை தெரியும். அந்தத் தீக்கடைகோலைப் போன்றவன் நம் மன்னன்.''

ஔவையார் சிறிது பேசாமல் இருந்தார். உவமையை எதற்காகச் சொன்னார் என்று முன் இருந்தவர்கள் சிந்திக்கத் தொடங்கினார்கள். அப் புலமைப் பிராட்டியாரே உவமையை விளக்க முன்வந்தார்: ''அந்தத் தீக் கடைகோல் வீட்டின் இறப்பிலே செருகியிருக்கும்போது தன் ஆற்றல் தோன்றாமல் வெறும் கோலாக இப்பதுபோல, மிடுக்கு அற்றவனைப் போல் அமைந்திருக்கும் இயல்பும் நம் அரசனிடம் உண்டு. தான் தோன்றாமல் இருக்கவும் வல்லவன் அவன். செவ்வி நேர்ந்தபோது அந்தக் கடைகோலில் எரி முறுகி எழுந்து கொழுந்து விட்டுப் புறப்படுவது போல அவன் புறப்படவும் வல்லவன். இன்ன காலத்தில் இது செய்ய வேண்டும் என்பதை உணர்ந்தவன் அவன். கிடக்கும்போது கிடந்து பாயும்போது நன்றாகப் பாயவல்ல பெருவீரனை யல்லவா நாம் மன்னனாகப் பெற்றிருக்கிறோம்?'' பேச்சை முடித்த மூதாட்டியார் பொருள் செறிந்த பாடல் ஒன்றைச் சொன்னார்.

உடையன் ஆயின் உண்ணவும் வல்லன்;
கடவர் மீதும் இரப்போர்க்கு ஈயும்
மடவர் மகிழ்துணை, நெடுமான் அஞ்சி,
இல் இறைச் செரீஇய ஞெலிகொல் போலத்
தோன்றாது இருக்கவும் வல்லன்; மற்று அதன்

*கான்றுபடு கனைஎரி போலத்*
*தோன்றவும் வல்லன்,தான் தோன்றுங் காலே.*

[உடையன் ஆயின் - உணவுக்குரிய பொருள்வளத்தை உடையவனாக இருந்தால். கடவர்மீதும் - தான் காப்பாற்றக் கடமைப்பட்ட வீரர்களைவிட மிகுதியாக. ஈயும் அஞ்சி - துணையாகிய அஞ்சி. மடவர் - அறிவில்லாதார். இல் இறை - வீட்டின் இறப்பில். செரீஇய - செருகிய. ஞெலிகோல் - தீக் கடைகோல். கான்று - கனிந்து. படு - எழும். கனை எரி - கொழுந்துவிடும் நெருப்பு.]

ஔவையார் நல்லுரையும் பாடிய பாட்டும் வீரர்களின் வேகத்தை மாற்றி அமைதி பெறச் செய்தன.

வெளியிலே அன்று சேரமான் படைத் தலைவர்களோடு பேசினான். "விளையாட்டுப் போல இரண்டு மாதங்கள் ஆயினவே! எத்தனை நெல்லைத்தான் அவன் சேமித்து வைத்திருக்க முடியும்?" என்று கேட்டான்.

"ஒருகால் உள்ளேயே வயல்கள் இருக்குமோ?" —கேட்டவன் நெடுங்கேரளன்.

"தெய்வம் உணவு கொண்டுபோய் ஊட்டுமோ என்று கேள் அப்பா" என்றான் மன்னன்.

"இதில் ஏதோ சூது இருக்கிறது. உணவு வெளியிலிருந்துதான் போகவேண்டும்" என்று, யோசனையில் ஆழ்ந்திருந்த காரி கூறினான்.

அவன் கூறியதுதான் உண்மை. தகடூர்க் கோட்டைக்குள் சுருங்கையின் வழியாக நெல்லும் மற்ற உணவுப் பொருள்களும் யாரும் அறியாமல் இரவு நேரத்தில் போய்க் கொண்டிருந்தன. அந்த இரகசியம் சேரமானுக்குத் தெரியாது.

"அப்படியானால் கோட்டையைச் சுற்றி ஆராய வேண்டும்; இரவு நேரங்களில் விழிப்பாக இருந்து கவனிக்கவேண்டும்" என்றான் அரசன்.

# 12. அந்தப்புர நிகழ்ச்சி

இப்போது அதிகமானுடைய அரண்மனையில் முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அந்த நிகழ்ச்சிக்கு இலக்கிய ஆதாரம் ஒன்றும் இப்போது கிடைக்கவில்லை. ஆனாலும் அதிகமான் கோட்டை என்று இப்போது வழங்கும் ஊரில் வாய்வழிச் செய்தியாக இந்த வரலாறு வழங்கி வருகிறது.

அதிகமானுடைய அரண்மனை கோட்டைக்குள் இருந்தது. அங்கே அந்தப்புரமும் இருந்தது. அவனுடைய மனைவியும் அதிகமானுக்கு உறவினராகிய பெண்மணிகளும் அந்தப்புரத்தில் இருந்து வந்தார்கள். அவர்களுக்கு ஏவல் செய்யப் பல வேலைக்காரிகள் இருந்தார்கள்.

அரண்மனையில் உள்ளவர்களின் துணிகளை வெளுக்கும் தொழிலாளி ஒருவன் இருந்தான். அவன் ஆடை வெளுப்பவர்களின் தலைவன். அவனிடம் பலர் வேலை செய்தார்கள். அந்தப்புரத்துத் துணிகளை ஆடவர் வெளுப்பதில்லை. சலவைத் தொழிலாளர் குலப் பெண்களே வெளுத்துவந்தார்கள். அதிகமானுடைய மனைவியின் ஆடைகளை வெளுப்பதற்குத் தனியே ஒரு சலவையாளர் குலப் பெண்ணை அமர்த்தியிருந்தார்கள். ஒவ்வொரு நாளும் அவள் அந்தப் புரத்துக்கு வந்து வெளுப்பதற்குரிய துணிகளை எடுத்துச் செல்வாள்.

அரண்மனையில் வேலை செய்கிறவர்களுக்குத் தனியே மானியம் கொடுத்திருந்தார்கள். இது அந்தக் கால வழக்கம். அங்கே பல வகையான ஏவல்களைச் செய்கிறவர்கள் பரம்பரை பரம்பரையாக ஊழியம்

செய்து வந்தார்கள். மயிர் வினைஞர்கள், ஆடை வெளுப்பவர்கள், மண்கலம் கொடுப்பவர்கள், கட்டிட வேலை செய்பவர்கள், கொல்லர்கள், தச்சர்கள், கன்னார வேலை செய்பவர்கள், பொன் வாணிகர்கள் ஆகிய எல்லோருமே தந்தைக்குப் பின் மகனாக அரண்மனை ஊழியத்தைப் புரிந்து வருகிறவர்களே. அவரவர்கள் வாழ்க்கைக்குப் போதிய விளைவையுடைய இறையிலி நிலங்களைப் பழைய அரசர்கள் வழங்கியிருந்தார்கள். ஒவ்வோராண்டும் பண்டிகைக் காலங்களில் ஆடை, அணி, உணவுப் பண்டங்கள் முதலியன அரண்மனையிலிருந்து தனியே கிடைக்கும். அரண்மனையில் உள்ளவர்களுக்குத் திருமணமோ, மகப்பேறோ உண்டானால் அப்போது பரிசுகள் கிடைக்கும். அதனால் அத்தகைய தொழிலாளிகளும் கலைஞர்களும் நன்றாக வாழ்ந்தார்கள். பண்டிகைகளையும் விழாக்களையும் கொண்டாடினார்கள். அவர்களுடைய வீட்டில் மணம் முதலியன நடந்தால் அரண்மனையிலிருந்து அவற்றிற்கென்று தனியே பண்டங்களும் பொருளும் கிடைக்கும். இதனால், யாதொரு குறைவுமின்றி மனநிறைவோடு அந்தத் தொழிலாளர்கள் தம் தம் கடமைகளை ஒழுங்காகச் செய்துவந்தார்கள்; அரசனிடத்திலும் அவனுடைய உறவினர்களிடத்திலும் நண்பர்களிடத்திலும் அவர்களுக்கு ஆழ்ந்த அன்பு இருந்தது. அதுபோலவே அரண்மனையிலுள்ள அரசரும் அரசியரும் அந்தத் தொழிலாளர்கள் நன்மையைத் தம் நன்மையாகவே கருதி ஆவன செய்து வந்தார்கள்.

இத்தகைய அமைப்பில் அரசியின் ஆடைகளை வெளுக்கும் கடமையை ஒரு குடும்பத்தினர் மேற்கொண்டிருந்தனர். அதிகமான் காலத்தில் ஒரு பெண்மணி அரசிக்கு உடை ஒலிக்கும் ஊழியம் புரிந்துவந்தாள். அவளுக்கு ஒரு சிறிய பெண் இருந்தாள். அரண்மனைக்கு

வரும்போது அவளையும் அழைத்து வருவாள் தாய். தாய்க்கு முதுமை வந்துவிட்டது. அந்தப்புரம் செல்வதை அவள் நிறுத்திக்கொண்டாள்; தனக்குப் பதிலாகத் தன் மகளை அனுப்பினாள்.

நன்றாக வளர்ந்து அழகியாக நின்றாள் அந்தப் பெண். பருவத்தின் மெருகு அவள் மேனியிலே ஒளிர்ந்தது. அதிகமானுடைய மனைவிக்கு அவளிடம் தனி யன்பு ஏற்பட்டது. தன்னுடைய ஆடைகளில் பழையன வற்றை அவளுக்குக் கொடுப்பாள். அதை உடுத்துக்கொண்டு அவள் நின்றால் அரசி அவளைப் பார்த்துப் பார்த்து இன்புறுவாள். "அடி பெண்ணே, நீ எவ்வளவு அழகாய் இருக்கிறாய்! அரசியாகப் பிறக்கவேண்டியவள், வேறு குடும்பத்திலே பிறந்துவிட்டாயே! பிரமன் சிறிது நாழிகைக்குமுன் உன்னைப் படைத்திருந்தால் நீ எந்த மன்னனுடைய அந்தப்புரத்தில் இருப்பாயோ!" என்பாள்.

"போங்கள் அம்மா! என்னை ஏன் இப்படிப் பரிகாசம் செய்கிறீர்கள்? அப்படி ஏதாவது இருந்தால் உங்கள் அரண்மனைச் சோறுதான் காரணம்" என்பாள். அவளுக்கு அடிக்கடி அரண்மனை மடைப் பள்ளியிலிருந்து உணவையும் சிற்றுண்டிகளையும் அரசி கொடுக்கச் செய்வது வழக்கம்.

"உன்னையும் என்னையும் பார்த்தால் உன்னைத் தான் அரசியென்று தெரியாதவர்கள் நினைப்பார்களடி!" என்று அரசி பாராட்டுவாள்.

"அப்படியெல்லாம் சொன்னால் எனக்குக் கோபம் வரும், அம்மா!" என்றுபொய்யாகக்கடிந்து கொள்வாள் அந்த இளம் பெண்; ஆனால் அவள் உள்ளத்துக்குள் பெருமை பொங்கும். சிறு பெண்தானே? அந்தப் பெண் அரசி சொல்வதையெல்லாம் வீட்டுக்குப் போய்த் தன் தாயிடம் சொல்வாள். அவள் மகிழ்ச்சிக் கடலில்

ஆழ்ந்துபோவாள். "ஆமாமடி பெண்ணே, நீ இராசாத்தியாகப் பிறக்க வேண்டியவள்தான்" என்பாள்; அடுத்து, "உன்னைத் தட்டிக்கொண்டு போக எந்த ஆண்பிள்ளை பிறந்திருக்கிறானோ?" என்பாள்.

ஒரு நாள் அந்தப் பெண்ணைக் காணாவிட்டால் அரசிக்குப் பொழுது போகாது. அவள் அழகியாக இருந்ததோடு அறிவுச் சிறப்பும் உடையவளாக இருந்தாள். நன்றாகப் பேசினாள். இங்கிதம் அறிந்து பழகினாள். எப்போதாவது அரசிக்கு மனவருத்தம் இருந்தால் சிரிக்கச் சிரிக்கப் பேசி அவளுக்கு இருந்த வருத்தத்தை மறக்கும்படி செய்வாள்.

சிறுமியாக இருக்கும்போது அவள் நினைத்த போதெல்லாம் அரண்மனைக்கு வந்துகொண்டிருந்தாள். பருவ மங்கையாக மிளிரத் தொடங்கியபின் நாலு பேர் கண்ணில் படும்படி வருவதில்லை; யாரும் காணாதபடி ஒதுங்கி ஒதுங்கி அந்தப்புரத்துக்குப் போவாள். அரசி பல அந்தரங்கச் செய்திகளையும் அவளிடம்சொன்னாள். அரண்மனையிலிருந்துவெளியே போவதற்கு ஒரு சுரங்க வழி இருக்கிறதென்ற இரகசியத்தைக்கூடச் சொன்னாள்.

ஒரு நாள் அரசி அரண்மனைக்கு வெளியே போக வேண்டியிருந்தது. அன்று ஏதோ சிறப்பான நாளாதலால் கோட்டைக்குள் பெருங் கூட்டம். வெளியிலே உள்ள இறைவன் திருக்கோயிலுக்குச் சென்று தரிசனம் செய்துகொண்டு உடனே வர எண்ணினாள் அரசி. அப்போது அந்தப் பெண் வந்திருந்தாள். அவளைத் துணைக்கு அழைத்துக்கொண்டு சுருங்கை வழியே புறப்பட்டு வெளியிலே வந்தாள். யாருக்கும் தெரியாமல் வந்து, தரிசனம் செய்துவிட்டு, மீட்டும் அந்த வழியே அரண்மனைக்குப் போய்விட்டாள். அரசியுடன் செல்லும்போது சுருங்கையின் அமைப்பையும்

அதன் இரண்டு முனைகளையும் கவனித்தாள், துணை சென்ற இளம் பெண்.

ஒரு நாள் அவள் அரண்மனைக்குள் நுழைந்து அந்தப்புரத்துக்குப் போய்க்கொண்டிருந்தாள். அப்போது அரசிக்குத் தம்பி முறையாகும் ஒருவன் பார்வை அவள் மேல் விழுந்தது. அவன் அண்ணர மனை அதிகாரிகளில் ஒருவனாக வேலை பார்க்கிறவன். அவன் தன் கண்களை நம்பவில்லை. 'இப்படியும் ஓரழகி இங்கே இருக்கிறாளா?' என்று வியந்தான். அது முதல் அவள் வருவதையும் போவதையும் கவனித்தான். அரசிக்குத் துணி வெளுப்பவள் என்பதைத் தெரிந்துகொண்டான். அவளைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு உள்ளம் ஏதோ செய்தது.

ஒரு நாள் அவள் அந்தப்புரத்திலிருந்து தன் வீட்டுக்குச் செல்லும்போது ஒதுக்கமான இடத்தில் அவள் போகும் வழியில் நின்றான். அவள் அணுகும் போது, "ஏ பெண்ணே, சிறிது நில்; உன்னுடன் சில வார்த்தைகள் பேச வேண்டும்" என்றான். அறிவாளியாகிய அந்தப் பெண் அவன் பார்வையையும் குரலின் குழைவையும் கொண்டு அவன் இயல்பை உணர்ந்து கொண்டாள்; மறுமொழி பேசாமல் சென்றுவிட்டாள்.

அவன் இன்னும் சில நாள் கழித்து அவளை வழி மறித்தான். அவள் அந்தப்புரத்துக்குச் செல்லாமல் திரும்பிப் போய்விட்டாள். அன்று அவளைக் காணாத அரசி காரணம் தெரியாமல் திகைத்தாள். அவள் உடம்புக்கு நோய் வந்துவிட்டதோ என்று அஞ்சினாள். அவள் வீட்டுக்கு ஆளை அனுப்பி விசாரித்து வரச் சொன்னாள். உடம்பு சரியில்லை யென்றும், மறுநாள் வருவதாகவும் சொல்லியனுப்பினாள் அவள்.

மறுநாள் துணைக்கு ஒரு கிழவியை அழைத்துக் கொண்டு அவள் அரண்மனை சென்றாள். அந்தப்புரத்துக்கும் போனாள். உடன் வந்த கிழவியை வெளி

யிலே நிறுத்திவைத்துவிட்டு, "உங்களுடன் சிறிது தனியே பேச வேண்டும் அம்மா!" என்று அரசியை அழைத்துச் சென்றாள். உள்ளே போனவுடன் அவள் அழத் தொடங்கிவிட்டாள்; துயரத்தால் விம்மினாள்.

"என்னடி இது? ஏன் அழுகிறாய்?" என்று கேட்டாள் அரசி.

"இனிமேல் இந்த அரண்மனைக்கு நான் வர முடியாதம்மா. பொல்லாதவர்கள் இருக்கிற இடமாகப் போய்விட்டது. நான் மானத்தோடு வாழ எண்ணினால் இங்கே வரக் கூடாது" என்று திக்கித் திக்கிப் புலம்பிச் சொன்னாள்.

"நீ என்ன சொல்கிறாய்? என்ன நடந்தது? சொல்லிவிட்டு அழு."

"யாரோ உங்கள் தம்பியாம்; என்னைக் கண்டு பல்லை இளிக்கிறான்."

"என் தம்பியா?"

"ஆமாம்; அவன்தான் சொன்னான். கடவுளே என்னைக் காப்பாற்றினார். அந்தக் கயவன் கண்ணிலே பட என்ன பாவம் செய்தேனோ தெரியவில்லை. இனி அவன் இருக்கும் வரையில் இங்கே என்னால் தலை காட்ட முடியாதம்மா."

"போடி பைத்தியக்காரி! எவனோ ஒருவன் தவறு செய்தால் அதற்காக நீ என்னைப் பார்க்காமல் இருக்கிறதாவது! நான் மன்னரிடம் சொல்லி அவனை ஒறுக்கச் சொல்கிறேன். நீ எப்போதும்போல் வந்து போய்க்கொண்டிரு."

அந்தப் பெண் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். வரும்போது ஒரு துணையுடன் வருவதும் போகும்போது அரண்மனையிலிருந்து பெண் துணையுடன் போவதுமாக இருந்தாள்.

அவளுக்கு மனத் துயரம் ஆறவில்லை. தன்னை ஒரு தொழிலாளர் பெண் என்று எண்ணித் தீங்கு புரிய நினைந்த அந்தப் புல்லியனை வேலையிலிருந்து ஓட்டிவிட வேண்டுமென்று கறுவினாள். ஒவ்வொரு நாளும் அரசியை, "அவனை என்ன செய்தீர்கள் அம்மா?" என்று கேட்பாள். அரசிக்கோ இந்த நிகழ்ச்சியைப் பெரிதாக்க மனம் இல்லை; "மன்னரிடம் சொல்லி யிருக்கிறேன்" என்பாள்.

"நான் ஏழையென்று நீங்கள் எண்ணிவிட்டீர்கள். அதனால்தான் எனக்கு வந்த இன்னலைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை. நீங்களே இப்படி நினைக்கும்போது அந்தப் பாவி என்னைக் கிள்ளுக் கீரையாக நினைத்தது வியப்பே அன்று" என்று ஒரு நாள் அவள் சற்றுக் கோபமாகவே பேசினாள்.

"அழகான பெண் என்றால் கண் உடையவர்கள் பார்க்காமல் இருப்பார்களா?" என்று அரசி விளையாட்டாகச் சொன்னாள்.

அந்தச் சொல் காதில் விழுந்ததோ இல்லையோ, அந்த இளம் பெண் புலிபோலச் சீறினாள். "என்ன அம்மா சொல்கிறீர்கள்? அவன் உங்களுக்குத் தம்பி என்று சொன்னது உண்மையாகவே இருக்கும் என்று இப்போது எனக்குத் தோன்றுகிறது. நான் ஏழையாக இருக்கலாம். நீங்கள் அரசியாக இருக்கலாம். ஆனால் உங்களுக்குள்ள மானம் எங்களுக்கும் உண்டு அம்மா. கற்பைக் காத்துக்கொள்வதில் எங்களுக்குள்ள வீரம் உங்களுக்குக்கூட வராது" என்று படபடவென்று கொட்டிவிட்டாள்.

அரசி நடுங்கிப் போனாள். 'ஏன் இப்படிப் பேசினோம்?' என்று இரங்கினாள். "நான் இன்று எப்படியாவது அரசரிடம் சொல்லி ஏதாவது வழி பண்ணுகிறேன். நீயும் இங்கே இரு. உன் காதில் கேட்கும்

படி நான் அவரிடம் பேசுகிறேன். நீ மறைவாக இருந்து கேள். அப்பொழுதாவது உனக்கு மனம் ஆறுகிறதா, பார்க்கிறேன்'' என்று அவளை ஆற்று வித்தாள்.

அதிகமான் அப்போது வருவான் என்பதை அறிந்தே இதைச் சொன்னாள் அரசி. அந்தப் பெண் ஒரு மறைவிடத்தில் இருந்தாள். சிறிது நேரத்தில் அதிகமான் வந்தான். அவனுடன் அளவளாவினாள் அரசி. பேச்சினிடையே அந்தப் பெண்ணைப் பற்றிச் சொல்லத் தொடங்கினாள்.

''என் ஆடைகளை வெளுத்துத் தரும் பெண் ஒருத்தி நாள்தோறும் இங்கே வந்து போகிறாள். அவள் தன் கடமையை நன்றாகச் செய்து வருகிறாள்.''

''அவளுக்குப் பரிசு கொடுக்க வேண்டுமோ?''

''இல்லை; இல்லை. அவள் இளம் பெண்; இன்னும் மணமாகாதவள்.''

''மணம் செய்துவைக்க வேண்டும் என்று சொல்லப் போகிறாய்.''

''அதுவும் இல்லை. அவள் பார்க்க அழகாக இருப்பாள். நல்ல வளர்ச்சியுடைய உடம்பு.''

''இந்த வருணனைகளெல்லாம் எதற்கு?''

''அவளைக் கண்டு அரண்மனை அதிகாரிகளில் யாரோ கண் அடித்தானாம்.''

அதிகமான் அதைச் சரியாகக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. மறுபடியும் அத்தாணி மண்டபத்துக்குப் போகவேண்டி யிருந்தது. ''சரி, சரி; அழகாக இருப்பதே ஒரு கேடு. அவளும் பணத்துக்கு ஆசைப் பட்டுப் பல்லை இளித்திருப்பாள். அதை மட்டும் உன்னிடத்திலிருந்து மறைத்துவிட்டாள் போலிருக்கிறது'' என்று அந்த நிகழ்ச்சியைப் பொருட்படுத்தாமலே பேசினான்.

"அந்தப் பெண் அழுதுகொண்டு வந்து நிற்கிறாள்."

"அதையெல்லாம் நீ நம்பாதே! அந்த அழுகையை யெல்லாம் நாளைக்கே பொருளாக மாற்றுவாள். இந்த மாதிரிப் பெண்களை இங்கே வர விடுவதே தவறு! சரி சரி; எனக்கு வேலை இருக்கிறது; போய் வருகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டுவிட்டான்.

மறைவில் நின்ற ஏழை மங்கை காதில் அதிகமானுடைய பேச்சு நாராசம் போல் விழுந்தது. அவளுக்கு மாத்திரம் ஆற்றலும் வாய்ப்பும் இருந்தால் அந்த நாவைத் துண்டித்திருப்பாள். 'எத்தனை இழிவாக ஏழைகளை நினைக்கிறான் இந்தக் கீழ் மகன்! அரசனே இப்படி இருக்கும்போது அவன் ஏவலர்கள் கற்புக்கும மானத்துக்கும் பெண்மைக்கும் எங்கே மதிப்புக் கொடுக்கப் போகிறார்கள்? இவர்களால் உலகில் அறம் செத்துப் போய்விடும்' என்று குமுறினாள். அரசி வருவதற்கு முன் மெல்ல நழுவி விட்டாள்.

அரசி வந்து பார்க்கும்போது அவளைக் காணவில்லை. கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாகி விட்டதே என்று அவள் வருந்தினாள். எப்படியாவது அவளுக்கு ஆறுதல் கூறலாம் என்று வந்தவள், அவளைக் காணாமையினால் பின்னும் துயருற்றாள்

அன்று போனவள்தான்; அப்பால் அரண்மனைப் பக்கமே அந்தப் பெண் கால் எடுத்து வைக்கவில்லை. அவள் தாய், "ஏன் அம்மா அரண்மனைக்குப் போகவில்லை?" என்று கேட்டாள். "மானம் மரியாதையுள்ளவர்கள் போகிற இடம் அன்று அது" என்று சுருக்கமாகச் சொல்லி விட்டாள் அவள் பெண். ஏதோ தவறான செயல், அவள் சீற்றத்தைத் தூண்டிவிட்டிருக்க வேண்டுமென்று தாய் உய்த்துணர்ந்து சும்மா இருந்துவிட்டாள்.

அந்தப் பெண்ணுக்கு அதிகமானிடத்திலும் அவனைச் சேர்ந்தோரிடத்திலும் கட்டுக்கடங்காத வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. பழிவாங்கவேண்டும் என்ற துடிப்பும் உண்டாயிற்று. யாரேனும் அதிகமானைப் புகழ்ந்தால் அவள் அங்கே நிற்பதில்லை. 'கற்பின் பெருமையை உணராத, பெண்மையின் உயர்வைக் காப்பாற்ருத, அரசன் அரசனு? அரக்கன் அல்லவா?' என்று எண்ணி எண்ணிப் பொருமினுள். பாவம்! யாருக்கும் நினைந்து தீங்கு புரியாத அதிகமான் அந்தப் பெண்ணளவில் பொல்லாதவன் ஆகிவிட்டான். அதை ஊழ்வினைப் பயன் என்று சொல்வதை யன்றி வேறு என்ன வென்பது?

# 13. வஞ்சமகள் செயல்

தன் படை முற்றுகை இட்டிருந்தும் பட்டினி இன்றி, வாடாமல் வதங்காமல் அதிகமான் உள்ளே இருப்பதைச் சேரமான் நினைத்த போதெல்லாம் வியப் பாக இருந்தது; ஆத்திரமும் வந்தது. 'கோழை! வீதி யில் மாடு ஓடி வருகிறதென்று மடைப் பள்ளிக்குள்ளே ஒரு வீரன் புகுந்தானும்! அவனைப் போலவே இவனும் இருக்கிறான்' என்று இழிவாக எண்ணினான்.

நாட்கள் போய்க் கொண்டிருந்தன. வீரர்களுக்குச் சுறுசுறுப்பே இல்லை. இரவு நேரங்களில் தம்மை அறியாமல் கோட்டைக்குள் உணவு செல்லுகிறதோ என்பதை ஆராயப் புறப்பட்டார்கள் சிலர். கையில் தீப்பந்தங்களை ஏந்திக்கொண்டு சுற்றி வந்தார்கள். அது கோட்டைக்குள் இருப்பவர்களுக்குத் தெரிந்தது. சுற்றி வந்தவர்களின்மேல் அம்பை எய்தார்கள். அம்புக்குத் தப்பி ஆராய்ச்சி செய்தும் ஒன்றும் புலனாகவில்லை. கோட்டைக்கு நெடுந்தூரத்துக்கு அப்பால் காட்டினிடையே சுருங்கையின் வழி ஒன்று இருக்கிற தென்பதை அவர்கள் எப்படி அறி வார்கள்? திரும்பத் திரும்பக் கோட்டை வாயிலைக் கவனித்தார்கள். சில இடங்களில் உள்ள திட்டிவாச லைக் கூர்ந்து நோக்கினார்கள். மேலிருந்து கயிற்றின் வழியாகவோ நூலேணியின் வழியாகவோ யாரேனும் இறங்கி வரக்கூடுமோ என்றும் ஆராய்ந்து பார்த் தார்கள். எத்தனை விதமாகத் துருவிப் பார்த்தும் அவர்களுக்கு எந்தத் துப்பும் கிடைக்கவில்லை.

மறுபடியும் சேரன் அந்தரங்க அவையைக் கூட்டி னான். "அதிகமானை நாம் வெல்ல முடியாதுபோல்

இருக்கிறதே! அவன் நெடுந்தூரத்தில் இருந்து, நம்மால் அவனை அடைந்து எதிர்க்க முடியாது என்று முடிந்தாலும், அதற்குப் பொருள் உண்டு. இங்கே நம் முன் அருகில்தான் இருக்கிறான். ஆனாலும் அவனை நம்மால் அணுக முடியவில்லை. அவன் பல ஆண்டுகளாகத் தன் கோட்டையில் இருந்துகொண்டே இருப்பான் போல் இருக்கிறது. இதுவீரமா? கோட்டையின் வலிமையினால் தன் கோழைத்தனத்தை மறைத்துக் கொண்டிருக்கிறான். அது கிடக்கட்டும். இத்தனை காலமாக அவனும் அவன் வீரர்களும் உண்ணும் சோறு அங்கேயே கிடைக்கிறதா? அல்லது மண்ணைத் தின்று பசியைப் போக்கப் பழகிக் கொண்டிருக்கிறார்களோ!''

சேரமான் பேச்சில் அச்சம், கோபம், இழிவு, பெருமிதம் எல்லாம் குரல் கொடுத்தன. அருகில் அமர்ந்திருந்தவர்கள் வாய் திறக்கவே இல்லை. அவர்கள் பேசுவதற்குப் புதியதாக என்ன இருக்கிறது? காரி முகம் சோர்ந்து உட்கார்ந்திருந்தான். அவன்தானே இந்த முற்றுகைக்குக் காரணம்? ஏதோ குற்றம் செய்தவனைப் போல அவன் தலையைக் குனிந்து கொண்டிருந்தான்.

''என்ன, நீர் ஒன்றும் பேசாமல் இருக்கிறீரே?'' என்று சேரமான் கேட்டான்.

''என்ன பேசுவதென்றே தெரியவில்லை. ஒவ்வொரு நாளும் விடிகிறது; முடிகிறது. நாமும் எழுகிறோம்; இன்று ஏதாவது நமக்கு வாய்ப்பாக நடக்காதா என்று எதிர்பார்க்கிறோம்; இரவிலே உறங்கப் போகிறோம். இந்த அவல வாழ்வைக் கண்டு எனக்கே உள்ளம் குமைகிறது. இதற்கு நான்தானே காரணம் என்ற எண்ணம் வேறு இப்போது என் நெஞ்சை உறுத்துகிறது.''—காரி மனம் உளைந்து பேசினான்.

சேரனுக்கு உணர்வு வந்தது. மலையமான் உள்ளத்தில் சோர்வு புகுந்தால் பிறகு ஊருக்குத் திரும்ப

வேண்டியதுதான். அதை நினைத்தபோது சேர னுக்கு வயிற்றை என்னவோ செய்தது. இனித் தான் சோர்வாகப் பேசக்கூடாது என்று கருதினான். "என்ன அப்படிச் சொல்கிறீர்? எனக்கே அதிகமானை அடக்க வேண்டுமென்று நெடு நாட்களாக ஆவல் இருந்தது. உமக்கு வந்த இழிவு எனக்கு இல்லையா? அதிகமானை எதிர்ப்பதற்கு ஏற்ற செவ்வி வரவேண்டுமென்று காத் திருந்தேன். நீர் வந்து அந்தச்செவ்வியை உண்டாக் கினீர். நமக்குச் சரியானபடி போர் வாய்த்தால் விட லாமா? கையில் வலிமை இருந்தும் அதைப் பயன் படுத்த வகையில்லாமல் இருக்கிறதே என்றுதான் சொல்ல வந்தேன். நீர் சோர்வடைய வேண்டாம். ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறுக்கக் கூடாதா? இன்னும் எவ்வளவு காலமானாலும் காத்திருப்போம். நமக்கு என்ன? உணவுப் பஞ்சமா? உடைப் பஞ் சமா? வஞ்சிமா நகரிலிருந்து உணவுப் பொருள் வந்து கொண்டிருக்கிறது" என்று கூறுகையில் அவனுடைய குரல் மாறி யிருந்தது; ஊக்கமும் ஆறுதலும் ஊட்டும் வகையில் அவன் பேசினான்.

இப்படி இரண்டு மூன்று நாட்கள் சென்றன. படைத் தலைவர்களில் யாரேனும்ஒருவர்புறத்தேகோட் டையைச் சூழ வருவதும், அரசனும் மற்றத் தலைவர் களும் பாசறையிலேயே இருப்பதுமாக இருந்தார்கள். அன்று அரசனே கவசத்தைப் பூண்டு தன் குதிரை யின்மேல் ஏறிப் புறப்பட்டான். மாலை கவிந்து வந்தது.

அந்தச் சமயத்தில் ஒரு பெண் தன்னுடைய உடம்பை யெல்லாம் வெள்ளை ஆடையால் மூடிக் கொண்டு பாசறைக்கு அருகில் வந்தாள். படை வீரர்கள் அவளைக் கண்டவுடன் யாரோ ஒற்றுக வந் திருக்கிறார் என்ற எண்ணத்தால் அவளைப் பற்றிக் கொண்டு விரட்டினார்கள்; "நீ எங்கே வந்தாய்? உன்

மையைச் சொல். யார் உன்னை அனுப்பினார்கள்?'' என்று உலுக்கிக் கேட்டார்கள்.

அவள் அஞ்சவில்லை; நடுங்கவில்லை; ''உங்கள் அரசரைப் பார்க்க வந்திருக்கிறேன்'' என்றாள்.

''அரசரை அவ்வளவு எளிதில் பார்க்க முடியுமா? நீ யார்? எதற்காக அவரைப் பார்க்க வேண்டும்?''

''அவரிடம் தனியே பேசவேண்டும்.''

வீரர்கள் சிரித்தார்கள். ''உன்னைப் பார்த்தால் இள மங்கையாகத் தோன்றுகிறாய். நீ தனியே அரசரைச் சந்திக்கவேண்டுமென்று வந்திருக்கிறாயே; உனக்கு அச்சம் உண்டாகவில்லையா? நாணம் சிறிதும் எழவில்லையா?''

''உங்களுக்குப் பயன்படும் செய்தியைச் சொல்ல வந்திருக்கிறேன். ஆதலால் நான் அஞ்சவேண்டியதில்லை. சேர நாட்டு வீரர்கள் பிறபெண்களை உடன் பிறந்தவர்களாக நினைப்பவர்கள் என்று கேள்வியுற்றிருக்கிறேன்; அதனால் நாணம் அடையவும் அவசியம் இல்லை. நல்லதைச் செய்ய முனைந்தால் சிறிதளவு துணிவு வேண்டியதுதானே?'' என்று அந்தப் பெண் கூறினாள்.

''நன்றாகப் பேசுகிறாயே! உன்னுடைய மனத் துணிவைப் பாராட்டத்தான் வேண்டும். நீ சொல்ல வேண்டியதை எங்களிடம் சொல்; நாங்கள் அரசரிடம் அறிவிக்கிறோம்.''

''அப்படிச் சொல்கிற செய்தி அன்று அது; மிக மிக இரகசியமானது.''

வீரர்கள் அவளைப் பிட்டங் கொற்றனிடம் அழைத்துச் சென்றார்கள். ''இவள் யார்? எங்கே அழைத்து வந்தீர்கள்?'' என்று அவன் கேட்டான்.

''நான் சேர அரசரைப் பார்க்க வந்திருக்கிறேன். நீங்கள் அவரிடம் அழைத்துச் செல்ல முடியுமா?'' என்று அவளே பேசினாள்.

அவன் சிரித்துக் கொண்டான். "முடியுடை மூவேந்தர்களில் ஒருவராகிய சேர அரசரையா சந்திக்க விரும்புகிருய்? போர் மூண்டிருக்கிற இந்தச் சமயத்தில் எங்கள் பாசறையில் புகுந்ததோடு, அரசரையே பார்க்கவேண்டும் என்று சொல்கிருயே; உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ?"

"அரசரிடம் நான் சொல்ல வேண்டியது ஒன்று உண்டு. அதை அவர் தெரிந்துகொண்டால் எனக்கு எது வேண்டுமாஞலும் தருவார்."

"ஓகோ! அரசரிடம் பரிசு பெற வந்திருக்கிருயா? அதை என்னிடம் கேள்; நானே தருகிறேன்."

வந்த பெண் சற்றே சினம் கொண்டாள். "உங்களேப் பார்த்தால் பொறுப்புள்ள பதவி தாங்குகிறவர்கள் போலத் தெரிகிறது. ஆஞல் உங்கள் பேச்சு அதற்கு ஏற்றபடி இல்லேயே! நான் வலிய வந்து உங்களிடம் உங்கள் நன்மையைக் கருதி ஒன்று சொல்லக் கருதிஞல் இப்படி இகழ்ந்தா பேசுவது? இது ஆண்மையும் அன்று; அரசியல் தந்திரமும் அன்று."

அந்தப் பேச்சைக் கேட்டதும் பிட்டங் கொற்றன் அயர்ந்து போஞன். அவளே அழைத்துக் கொண்டு காரியிருந்த கூடாரத்துக்குச் சென்ருன். "இந்தப் பெண் நம் அரசரைப் பார்க்கவேண்டுமாம்; ஏதோ ஓர் இரகசியமான செய்தியைக் கூற வேண்டுமாம்" என்ருன்.

காரி அவள் முகத்தைப் பார்த்தான். உடம்பைத்தான் அவள் மூடிக் கொண்டிருந்தாளே! "உன்னே யார் அனுப்பிஞர்கள்?" என்று கேட்டான்.

"யாரும் அனுப்பவில்லே; நானேதான் வந்திருக்கிறேன்."

"நீ எங்கே இருக்கிறவள்? உனக்குச் சுற்றத்தார் யார்?"

"நான் தகடூரில் இருக்கிறவள்; கோட்டைக்குள் வேலை செய்து கொண்டிருந்தவள்."

அறிவாளியாகிய காரி அவள் மிகவும் பயனுள்ள செய்தியைச் சொல்ல வந்திருக்கிருள் என்பதை நம்பினுன். பிட்டங் கொற்றனை அனுப்பி விட்டு அரசனிடம் அவளை அழைத்துக்கொண்டு சென்ருன். அப்போது தான் அரசன் வெளியிலிருந்து வந்து அமர்ந்திருந்தான். அரசனைக் கண்டவுடன் அந்தப் பெண் கும்பிடு போட்டாள். "யார் இவள்?" என்று கேட்டுக்கொண்டே அவளை ஏற இறங்கப் பார்த்தான் அரசன்.

"இவள் ஏதோ இரகசியமான செய்தியைச் சொல்ல வந்திருக்கிருளாம். இவளை நம்பலாமென்று எனக்குத் தோன்றுகிறது" என்று அரசன் காதில் மட்டும் கேட்கும்படி சொன்னுன் காரி.

"என்ன சொல்ல வந்தாய்?" என்று அவளைக் கேட்டான் அரசன்.

அவள் பேசாமல் காரியைப் பார்த்தாள்; அரசன் அவள் குறிப்பை உணர்ந்து கொண்டான். "அவர் இருக்கலாம். அவர் அறியாத மந்தணம் ஒன்றும் இங்கே இல்லை" என்ருன். காரியோ, "நான் சற்றே புறத்தில் இருக்கிறேன்" என்று சொல்லிச் சேரன் ஏதாவது சொல்வதற்குமுன் வெளியே போய்விட்டான்.

அந்த இளம் பெண் பேசத் தொடங்கினுள். "எனக்குக் கோட்டையின் அமைப்பெல்லாம் தெரியும்; இரகசியமும் தெரியும். உங்களுக்கு அது பயன்படும் என்று எண்ணிச் சொல்லத்தான் வந்தேன்."

"என்ன பெரிய இரகசியத்தை உன்னிடமிருந்து நான் எதிர்பார்க்க முடியும்?"

"அப்படி எண்ணக்கூடாது, மன்னர் பெருமானே! சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும். செய்தி

தெரிந்தால் பிறகு தங்களுக்கு அதன் அருமையும் பெருமையும் தெரியும்.''

''எங்களுக்கு நன்மை செய்யவேண்டும் என்ற அக்கறை உனக்கு ஏன் வந்தது? உனக்கும் எங்களுக்கும் என்ன தொடர்பு? உன் வார்த்தைகளை நம்பலாம் என்பதற்கு என்ன பிணை?'' என்று அரசன் கேள்விகளை அடுக்கினான்.

''இன்னும் பல கேள்விகளைத் தாங்கள் கேட்பீர்கள் என்று எனக்குத் தெரியும். தங்களுக்கு நன்மை செய்வதைவிட அதிகமானுக்குத் தீமை செய்வதுதான் என் நோக்கம். அந்தத் திறத்தால் தாங்களும் நானும் ஒத்த நிலையில் இருக்கிறோம். நான் அவனைப் பழி வாங்க வேண்டும். அதனைத் தங்களைக் கொண்டு முடித்துக்கொள்ளலாம் என்ற ஆவலோடு வந்திருக்கிறேன்.''

''உன் பேச்சைக் கேட்டு எனக்கு உன்னைப் பற்றி ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. சிரிப்பதா, சினப்பதா என்றும் தெரியவில்லை. ஏதோ செய்தி சொல்ல வந்தேன் என்றாய். இப்போது அதிகமானைப் பழி வாங்கவேண்டும் என்கிறாய். அதற்கு நாங்கள் கருவியாக இருக்க வேண்டும் என்கிறாய். நீ சொல்வது இன்னதென்று தெரிந்துகொண்டுதான் பேசுகிறாயா?''

''மன்னர் பெருமான் சற்றே பொறுமையோடு கேட்க வேண்டும். ஓர் இளம் பெண் துணிவாகத் தங்களைத் தேடி வந்திருப்பதைக் கொண்டே ஏதோ அரிய செய்தி இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதிகமான் கோட்டைக்குள் போகும் வழி எனக்குத் தெரியும்.''

''கோட்டைக்குள் போக வாயிலையல்லாமல் வேறு வழி இருக்கிறதா?''

''ஆம்; ஒரு சுருங்கை வழி இருக்கிறது. அதன் வழியாகத்தான் உள்ளே உணவுப் பொருள்கள்

போகின்றன" என்று அவள் கூறியபோது அரசனுக்கு வியப்புத் தாங்கவில்லை; "ஆ!" என்று மலைத்துப் போனான்.

"சுருங்கை வழியா? உனக்கு எப்படித் தெரியும்? எங்களுக்குத் தெரியவில்லையே!"

"இரகசியமாக இருக்கவேண்டுமென்றுதானே அதை அமைத்திருக்கிறீர்கள்? உங்களுக்குத் தெரியும்படி இருந்தால் அதற்கு என்ன பெருமை?"

"நீ எப்படி அதை அறிந்தாய்?"

"நான் கோட்டைக்குள் வேலை செய்து கொண்டிருந்தேன். அதிகமான் மனைவியோடு நெருங்கிப் பழகினேன். அதனால் எனக்குக் கோட்டையின் இரகசியம் தெரிந்தது. ஒரு சமயம் அந்தச் சுருங்கை வழியில் நானே அரசியுடன் போய் வந்திருக்கிறேன்."

"ஓ! அப்படியா? அங்கே வேலை செய்தவள் இப்போது இந்த வஞ்சச் செயல் செய்வதற்கு என்ன காரணம்?"

"அதைக் கேளுங்கள். சொல்கிறேன்" என்று கூறித் தன் மேற்போர்வையை அகற்றிக் கீழே வைத்தாள். அரசன் அவளை நன்றாகப் பார்த்தான். நல்ல அழகி என்பதைத் தெரிந்து கொண்டான்.

"சொல்" என்று ஆவலோடு கேட்டான்.

"அந்தப்புரத்துக்கு நான் அடிக்கடி போய் வருவேன். ஒரு நாள் ஒரு கயவன் என்னைக் கண்டு சொல்லத் தகாத சொற்களைச் சொன்னான். நான் அரசியிடம் தெரிவித்து அவனை ஒறுக்கச் சொன்னேன். அவள் அதிகமானிடம் அந்தச் செய்தியைச் சொன்னாள். அவன் மிகவும் அலட்சியமாகப் பேசினான். மகளிர் கற்பைக் கிள்ளுக் கீரையைப் போல மதித்துப் பேசினான். அன்று நான் மேற்கொண்ட வஞ்சினத்தால், பிறகு அந்தப் பக்கமே போவதை ஒழித்தேன். மகளிரைப் பாதுகாவாத

அரசனும் ஓர் அரசனா? அவன் இருப்பதை விட அழிந்தொழியட்டும் என்று தோன்றியது. ஏழையாகிய என்னால் என்ன செய்யமுடியும்? கடவுளே என் பங்கில் இருந்து தங்கள் படைகளை இங்கே அனுப்பியிருக்கிறார்."

சேரமான் சற்றே சிந்தனையில் ஆழ்ந்தான். "என் நண்பரும் பெரிய வீரருமாகிய காரி வெளியே நிற்கிறார். அவரையும் உள்ளே அழைத்து யோசனை செய்ய வேண்டும். அதில் உனக்குத் தடை ஒன்றும் இல்லையே?'' என்றான்.

"இந்த இரகசியத்தைத் தெரிவிக்கத்தான் வந்தேன். இங்கிருந்து நெடுந்தூரத்தில் ஒரு காட்டுக்குள் சுரங்க வழியின் வாசல் இருக்கிறது. நான் அதைத் தங்களுக்குக் காட்டச் சித்தமாக இருக்கிறேன். அதன் வழியே உள்ளே செல்லலாம். தாங்கள் யாருக்குச் சொன்னாலும் சரி; இரகசியத்தை எப்படி வைத்துக் கொள்ளவேண்டும்என்பது தங்களுக்குத்தெரியாதா?''

மணியை அடித்துக் காவலனை அழைத்தான் அரசன்; காரியை அழைத்து வரச் சொன்னான். வந்த அவனிடம் எல்லாவற்றையும் சொன்னான். "இந்தப் பெண்ணால் ஓர் அரிய நன்மை நமக்கு உண்டாகப் போகிறது என்று அப்போதே நான் உய்த்துணர்ந்தேன்'' என்றான் காரி.

அந்தப் பெண் இன்னாளென்று தெரிவிக்கவும் வேண்டுமா? அந்தப்புரத்தில் ஆடை வெளுத்து வந்த பெண்தான். இப்போது வஞ்ச மகளாக மாறி விட்டாள்.

காரியும் சேரனும் கூடிப் பேசினார்கள். அன்று இரவில் அந்தக் காட்டுக்குச் சென்று சுருங்கையின் வாசலைப் பார்த்தறிவது என்று திட்டமிட்டார்கள். சில வீரர்களை அழைத்துக்கொண்டு, காரியும் மன்னனும் புறப்பட்டார்கள். வஞ்சப்பெண்ணும் உடன் சென்றாள்.

காட்டுக்குள் சென்று மறைந்து நின்ருர்கள். நள்ளிரவில் சிலர் தீப்பந்தங்களுடனும் தலையில் மூட்டைகளுடனும் அங்கே வந்து கீழே இறங்குவதைக் கண்டார்கள். உடனே வீரர்கள் அவர்களைப் போய்ப்பற்றிக் கொண்டார்கள். அவர்களைச் சிறைப்படுத்திஞர்கள். காவலர் சிலரை அங்கே நிறுத்திவிட்டுப் பாசறைக்கு வந்தார்கள். அதிகமானை வென்றுவிட்டது போன்ற மகிழ்ச்சிப் பெருக்கில் ஆழ்ந்தான் பெருஞ்சேரல் இரும்பொறை. அந்தப் பெண்ணுக்குச் சில பரிசிலை அளித்து அவளை வீட்டுக்குக் காவலுடன் அனுப்பிஞன். தான் அறிந்த இரகசியத்தை எப்படிப் பயன்படுத்துவது என்ற ஆராய்ச்சியில் அவன் இப்போது இறங்கிஞன்; காரியையும் உசாவிஞன்.

"நம்முடைய படைகளை அந்தச் சுருங்கையின் வழியே அழைத்துக் கோட்டைக்குள்ளே போய்ப் போர் செய்யலாமா?" என்று கேட்டான் அரசன்.

"சுருங்கை சுருங்கியதாகவே இருக்குமென்று நினைக்கிறேன். அதில் ஒரே சமயத்தில் இரண்டு மூன்று பேருக்குமேல் போக முடியாது. படை போவதற்காக அமைத்தது அல்லவே அது?"

"பின் அதை நாம் எப்படிப் பயன்படுத்திக் கொள்வது?"

"நமக்கு அதனல் ஒரு பயனும் இல்லை. அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் விடுவதே நல்லது."

சேரமானுக்கு அந்த விடை இனிக்கவில்லை. "நமக்குக் கிடைக்காத இரகசியம் கிடைத்திருக்கிறது. அந்த வழியை நாம் கண்ணலே பார்த்தோம். அதை வீணகப் போகச் செய்வதா? நீர் சொல்வது விளையாட்டாக இருக்கிறதே!" என்ருன்.

"நான் வினையைத்தான் சொல்கிறேன். அந்தச் சுருங்கையை நாம் பயன்படுத்திக்கொள்ள வேண்டாம்

என்று சொன்னேனேயன்றி, நாம் அறிந்த இரகசியத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டாம் என்று சொல்லவில்லையே!''

''உமது பேச்சு எனக்கு விளங்கவில்லை.''

''விளங்கும்படி சொல்கிறேன். இதுவரையில் நாம் அறியாமல் மயங்கி யிருந்த ஒன்று இப்போது நமக்குத் தெளிவாகி யிருக்கிறது. அதிகமான் இத்தனை காலம் உள்ளே இருந்து வருவதற்கும், உணவு பெறுவதற்கும் உரிய துணை என்ன என்று நமக்குத்தெரியாமல் இருந்தது; இப்போது தெரிந்துவிட்டது. அவனுக்கு உணவு செல்வதைத் தடுக்கும் நிலையில் நாம் இருக்கிறோம். அந்தச் சுருங்கை நமக்குப் பயன்பட வேண்டாம்; அதிகமானுக்கும் பயன்பட வேண்டாம். இதுவரையில் அது நமக்குப் பயன்படவில்லை; அதிகமனுக்குப் பயன்பட்டது. இப்போது அதனால் அவனுக்குப் பயன் கிட்டாமல் செய்துவிட்டால் உணவு வராமல் திகைப்பான். உள்ளே இருப்பவர்கள் பட்டினியால் வாடுவார்கள். ஒன்று, எல்லோரும் இறந்து போவார்கள்; அல்லது வெளியே வந்து நம்மோடு போர் செய்வார்கள்.''

''நல்ல அறிவு உமது அறிவு! நல்ல யோசனை! அப்படியானால் அந்தச் சுருங்கையில் நம் காவலரை வைத்துப் பாதுகாக்கச் செய்யலாமா?''

''அதுகூட வேண்டியதில்லை. அந்த வழியை அடைத்துவிட்டு, யாராவது ஒருவனைச் சும்மா அந்தப் பக்கத்தில் உலாத்திக் கொண்டிருக்கச் செய்தால் போதும்.''

அதிகமான் அன்று தன் மனைவி கூறியதைக் கூர்ந்து கவனிக்காமல் பேசிய பேச்சு இப்படி விளைந்தது. ஏழைப் பெண்ணின் குறையைப் பொருட்படுத்தாமல் புறக்கணித்த செயல் அவனுக்கே தீங்காய்

முடிந்தது. ஊழ்வினையின் வலியை மாற்ற யாரால் தான் முடியும்?

அடுத்த நாளே சுருங்கை வாயிலை அடைத்துக் கனமான சுவர்களைக் கட்டிவிட்டார்கள், சேரன் படை வீரர்கள். அதிகமான் வாயில் துணியை அடைத்தது போன்றது அது என்று சொல்வதா? அல்லது அவன் வயிற்றில் அடித்தது என்று சொல்வதா? இரும் பொறையினுடைய ஆட்கள் சுருங்கை வாயிலிலா மண்ணைப் போட்டார்கள்? அதிகமான் வாயிலே அல்லவா மண்ணைப் போட்டுவிட்டார்கள்?

# 14. போர் மூளுதல்

தகடூர்க் கோட்டைக்குள்ளே இதுகாறும் இருந்த அமைதி இப்போது குலைந்தது. உண்மையான ஆபத்து இப்போதுதான் வந்து நிற்கிறதென்று அதிகமான் உணர்ந்தான். சுருங்கை வழியைப் பகைவர்கள் அடைத்தது தெரிந்து, அவர்களுக்கு அவ்வழி எப்படித் தெரிந்தது என்று ஆய்ந்தான். அதைப்பற்றி இப்போது ஆராய்ந்து பயன் இல்லையென்று விட்டுவிட்டான். இனிமேல்தான் மெய்யான போருக்கு ஆயத்தம்செய்ய வேண்டும். இனியும் கோட்டைக்குள் நெடுநாள் தங்க முடியாது. பட்டினி கிடந்து வாடிக் கதவைத் திறப்ப தற்கு முன்னலே, உடம்பில் வலிமையும் போர்செய்யத் துடிக்கும் தோள்களும் உள்ளபோதே போரைத் தொடங்க வேண்டியதுதான். இந்தச் செய்தியை அதிகமான் படைத்தலைவர்களைக் கூட்டி அறிவித்தான். அவர்களின் வாயிலாகப் படை வீரர்கள் தெரிந்து கொண்டார்கள். அவர்களுக்கு மகிழ்ச்சிதான். "நல்ல வேளை! இப்போதாவது நம் தினவு தீரும் சமயம் வந்ததே!" என்று பெருமிதம் கொண்டார்கள்.

இரண்டு நாட்களில் கோட்டைக் கதவைத்திறந்து கொண்டு அதிகமான் படை புறப்பட்டது. முரசுகள் முழங்கின. கொம்புகளை ஊதினர்கள். வீரர்கள் போர் முழக்கம்செய்தார்கள். பாலத்தின் வழியே வந்து சேரன் படையோடு கைகலக்கத் தொடங்கினர்கள். இதுவரை யில் ஏதோ காவற்களம் போல இருந்த அந்த இடம் இப்போது முதல் தரமான போர்க்களமாகிவிட்டது. ஒரு பக்கம் பெருவீரனுகிய அதிகமானுடைய படை; ஒரு பக்கத்தில் சேரமான் இரும்பொறையின் படை.

வீறுடன் போரைத் தொடங்கிவிட்டார்கள் இரு சாராரும். யானைகளும் யானைகளும் மோதின. குதிரைகளும் குதிரைகளும் முட்டின. தேர்ப் படையும் தேர்ப் படையும் பொருதன. வீரர்கள் வில்லும் வாளும்ஏந்திப் போர் செய்தனர். அதிகமானுடைய அணிவகுப்பும் சேரமானுடைய படை வகுப்பும் பார்வைக்கு ஒரே அளவை உடையனவாகவே தோன்றின. முழையிலிருந்து யானையின்மேல் தாவும் சிங்கத்தைப் போல அதிகமான் வீரர்கள் பாய்ந்தனர். அயல் நாட்டில் சென்று போர் செய்வதைக் காட்டிலும் தமக்குரிய இடத்திலிருந்து போர் புரிவது ஊக்கத்தை மிகுதியாக்கும்; எளிதாகவும் இருக்கும். அந்த நிலையில் இருந்தமையின் அதிகமான் படைக்குக் கிளர்ச்சி மிகுதியாக இருந்தது. இதுவரையிலும் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தவர்களெல்லாம் விழித்தெழுந்து தோள்கொட்டி ஆர்த்தனர்.

மலைநாட்டுப் படையின் முன்னணியில் இருந்த பகுதிக்கு நெடுங்கேரளன் தலைமை தாங்கினான். அதிகமான் படையில் பெரும்பாக்கன் முன்படையை நடத்திப் பொருதான். பெரும்பாக்கன் பெரு வீரன்; அதிகமானால் சிறப்புப் பெற்றவன். அவனுக்குமுன் நிற்க நெடுங்கேரளனுக்குத் திறமை போதாது. முதல் நாள் போரில் யாரும் விழவில்லை. அடுத்த நாள் நெடுங்கேரளன் பெரும்பாக்கனுடைய அம்புக்கு இரையானான்.[1] முதல் வெற்றி அதிகமானுக்கே கிடைத்தது. அவன் கட்சியில் இருந்த படை வீரர்கள் பெரு முழக்கம் செய்து ஆரவாரித்தார்கள்.

சேரமான் இளமையையுடையஒருவீரத்தலைமகனை இழந்தது பற்றி மிகவும் வருந்தினான். "இனி நாம் சோர்வடையாமல் போரிட வேண்டும். இதுவரையில் போர் செய்ய வகையின்றிச் சும்மா கிடந்தோம். இப்

1. தகடூர் யாத்திரை (தொல். புறத். 24. உரை.)

போது அந்த வாய்ப்புக் கிட்டிவிட்டது. நம்முடைய விற்கொடியின் பெருமையையும் சேரர் மரபின் மானத்தையும் காப்பாற்ற வேண்டும். நம் படை வலிமையிற் பெரிது. நெடுங்கேரளனை நாம் களப்பலியாகக் கொடுத்துவிட்டோம். அதனால் இனி நம் பக்கந்தான் வெற்றி உண்டாகப் போகிறது" என்று அந்த வருத்தத்தைக் காட்டிக்கொள்ளாமல் வீரர்களுக்கு ஊக்கம் மூட்டினான்.

போர் நடந்து கொண்டிருந்தது. அதிகமான் கை வலுத்திருந்தது. பிட்டங் கொற்றன் படைத் தலைமை பூண்டான். போரின் போக்கு மாறவே இல்லை. இரு மருங்கும்சோர்வின்றிப்பொருதனர்வீரர்கள். யானைகள் வீழ்ந்தன; குதிரைகள் குலைந்தன; வீரர் சிலர் வீழ்ந்தனர். மான உணர்ச்சியினால் உந்தப்பட்டு வீரர்கள் போரிட்டனர். இப்போது காரியே ஒரு பெரிய படைக்குத் தலைமை ஏற்றுப் புறப்பட்டு விட்டான். அப்போது சேரர் படையில் ஒரு புதிய மிடுக்கு உண்டாயிற்று. முன்பு தோற்று ஓடினவன்தானே என்று அதிகமான் படை காரியைக் கண்டு முதலில் இகழ்ந்தது. ஆனால் பிறகு அவனுடைய பேராற்றலைக் கண்டு அஞ்சியது. அதிகமான் படையில் இருந்த சில சிறிய படைத் தலைவர்கள் வீழ்ந்தனர்.

அப்போது துணைப் படை வந்தால் நலம் என்று தோன்றியது அதிகமானுக்கு. சோழனிடமும் பாண்டியனிடமும் ஆள் அனுப்பித் துணைப் படையுடன் வர வேண்டுமென்று ஓலை போக்கினான். அவர்கள் வந்தால் நிச்சயம் போர் விரைவில் முடிவுக்கு வந்துவிடும் என்று அவன் நம்பினான்.

காரியின் வீரம் போர்க்களத்தில் மிகச் சிறப்பாக விளங்கியது. 'நம்மால் விளைந்த போர் இது' என்ற எண்ணம் அவன் உள்ளத்திலிருந்து அவனை உசுப்பிக் கொண்டே இருந்தது. அதனால் அவன் பெருவிறலுடன்

தன் குதிரையாகிய காரியின்மீது ஏறிப் பம்பரம்போலச் சுழன்றனன். அதிகமானுடைய பட்டத்து யானையைத் தன்வேலைக்கொண்டுதாக்கி வீழ்த்தவேண்டும்என்பது அவன் ஆவல். அது உள்ள இடமறிந்து தாவினான்.

இது அதிகமான் படைத் தலைவனுக்குத் தெரிந்து விட்டது. "எல்லோரும் விழிப்பாக இருக்க வேண்டும். அதோ காரி யென்னும் குதிரையின்மேல் வருகிறான் காரி. அவன் அந்தக் குதிரையின் மேல் ஏறி நடத்து வதாகத் தோன்றவில்லை. குதிரையும் அவனும் ஒட்டி யிருக்கின்றனர். அந்த அடற் பரியையும் அவனையும் பிரிக்க முடியாமல் கட்டி வைத்ததுபோலத் தோற்றம் தருகிறது, அந்தக் கோலம். அவன் காலில் வீரக் கழல் பளபளக்கிறது. கையில் வேல் சுடர் விடுகிறது. அவன் இலக்காகக் கொண்டிருப்பது இந்தப் பட்டத்து யானையை. நீங்கள் இந்தப் படை முழுவதையும் காக்க வேண்டும் என்பதில்லை. இந்த யானையைப் பாதுகாத் தால் போதும். அவன் வேறு ஒன்றையும் எறிய மாட் டான். இதைக் கொல்லும் குறிப்புடனே வருகிறான்'' என்று வீரர்களுக்குக் கட்டளை யிட்டான்.

தகடூர்ப் போரை வருணித்துப் பல புலவர்கள்பாடி யிருக்கிறார்கள். 'தகடூர் யாத்திரை' என்று தனியே ஒரு காப்பியமாக அந்தப் பாடல்கள்உருவாயின.இப்போது அந்தக் காப்பியம் முழுவதும் கிடைக்கா விட்டாலும் புறத்திரட்டு என்னும் நூலில் அதிலிருந்து சில பாடல்கள் சேர்க்கப் பெற்றுள்ளன. மலையமான் திரு முடிக் காரி அதிகமானது பட்டத்து யானையை வேலினால் எறிய முந்திய போது, அதிகமானுடைய படைக்குத் தலைவனாக இருந்தவன் கூறியதைத் தகடூர் யாத்திரைப் பாடல் ஒன்று விளக்குகிறது.

*கட்டி அன்ன காரி மேலோன்*
*தொட்டது கழலே; கையது வேலே;*

*சுட்டி யதுவும் களிறே; ஒட்டிய*
*தானை முழுதுடன் விடுத்து, நம்*
*யானை காமின்; அவன் பிறிதுஎறி யலனே.*[1]

[கட்டிஅன்ன-சேர்த்துக் கட்டியமைத்தாற் போன்ற, காரி: மலையமானுடைய குதிரையின் பெயர். தொட்டது-அணிந்தது. சுட்டியதுவும்-இலக்காகக் குறித்ததும். தானை-சேனை. காமின்-காவல் செய்யுங்கள்.]

மீன் குத்திக் குருவி தண்ணீரின் மேலே பறந்து மீனை எவ்வாறு கொத்தலாம் என்று படபடப்புடன் இருப்பதுபோல, மலையமான் அந்தக் களிற்றை வேலால் எறியும் துடிப்புடன் செவ்வியை நோக்கி இருந்தான். காரிக் குதிரையின் உடம்பில் சில சிறு புள்ளிகள் அழகாக இருந்தன. அவனுடைய வேலைக் கண்டால் மறவர் நடுங்குவர். அதை நினைத் தாலே நடுங்குபவர்களும் இருந்தார்கள்.

*புள்ளிக் காரி மேலோன்; தெள்ளிதின்*
*உள்ளினும் பனிக்கும் ஒருவே லோனே;*
*குண்டுநீர்க் கிடங்கிற் கெண்டை பார்க்கும்*
*மணிநிறச் சிறுசிரல் போலநம்*
*அணிநல் யானைக்கு ஊறுஅளக் கும்மே.*[2]

[காரி: மலையமான் குதிரை. உள்ளினும் பனிக்கும்-நினைத் தாலும் நடுங்குவதற்குக் காரணமான. குண்டு நீர்க் கிடங்கில் - ஆழமான நீரையுடைய அகழியில். மணி நிறம் - நீலமணியின் நிறத்தையுடைய. சிரல் - மீன் குத்திக் குருவி. ஊறு அளக்குமே - துன்பம் உண்டாக்கும் வழியை ஆராய்வான்.]

காரியே முன்வந்து போர்க்களத்தில் நிற்கிறான் என்பதை அறிந்து அதிகமான் தன்படையின் முன்னணிக்கு வந்து நின்றான். அவன் முகத்திலும் மார்பிலும் அம்புகளைச் சொரிந்தனர் பகைவர்கள். காரி வேலை அவன் மார்பிலே வீசி எறிந்தான். கவசம்

1. புறத்திரட்டு, 1372. 2. புறத். 1376.

இருந்ததனால் அது ஆழமாகப் பதியவில்லை. ஆயினும் அதிகமான் புண்பட்டான். மார்பிலே பட்ட புண்ணை விழுப்புண் என்று சொல்வார்கள். அதை வீரர் வரவேற்பர்.

புண்பட்ட அதிகமான் கோட்டைக்குள் சென்றான். பஞ்சும் நெய்யும் கொண்டு புண்ணுக்கு மருந்திட்டனர். இரண்டு நாட்கள் அதிகமான் போர் முனைக்குப் போக வில்லை. "இன்று நம்முடைய அரசர் புண்படாமல் இருந்தால் காரி தொலைந்திருப்பான்" என்று ஒரு வீரன் கூறினான். ஔவையார் அங்கே இருந்தார். அவர் காதில் அது விழுந்தது. அவர் அதிகமானுடன் உரையாடிக் கொண்டிருந்தார். வீரன் கூறிய செய்தி அவர் உள்ளத்தே தேங்கியது. "ஆம், காரி ஒருவன் தானா? இன்னும் எத்தனை பேரோ வீழ்ந்திருப்பார்கள். இவன் விழுப்புண் பட்டதனால் உயிர் பிழைத்தவர்கள் பலர் என்றே சொல்ல வேண்டும்"[1] என்றார்.

அதிகமான் விழுப்புண் பட்டுக் கிடந்தான் என்ற செய்தியைக் கோட்டையில் இருந்தவர்கள் அறிந்து வருந்தினார்கள். இளையவர்களும் முதியவர்களும் மகளிரும் அவனைக் காண வேண்டும், காண வேண்டும் என்று துடித்தனர். அவன் பாதுகாப்பான இடத்தில் இருந்தான். அவன் இருந்த இடம் யாருக்கும் தெரிய வில்லை. சான்றோர் பலர் அவனை நாடி வந்தனர். ஆனால் அவர்களையும் காவல் காப்பவர்கள் விடவில்லை. "அவன், எல்லோரும் மகிழும்படி இன்னும் சில நாளில் பழையபடி வெளிப்படுவான்" என்று சொன்னார்கள், உடன் இருந்தவர்கள். இந்த நிகழ்ச்சியைத் தகடூர் யாத்திரையில் ஒரு பாடல் சொல்கிறது. அதிகமானைப் பார்க்க வந்த சான்றோரைப் பார்த்து, அவனுடன் இருந்து பாதுகாத்தவர்கள் சொன்னது போல அமைந்தது அந்தச் செய்யுள்.

---

1. புறநானூறு, 93.

அந்தப் பாடல் தகடூர்க் கோட்டை, அகழி முதலிய வற்றின் தோற்றத்தையும் சொல்கிறது. மதிலிலிருந்து எய்த அம்புகள் வீழ்ந்து அகழி தூர்ந்து விட்டதாம். அதனால் அது தரை மட்டமாகி அங்கே கன்று மேய்கிறதாம்.

*பல்சான் றீரே, பல்சான் றீரே*
*வீழ்ந்த புரிசைச் சேர்ந்த ஞாயில்*
*கணையின் தூர்ந்த கன்றுமேய் கிடங்கின்*
*மல்லல் மூதூர்ப் பல்சான் றீரே![1]*

என்று முதலில் அவர்களை விளிப்பதாக அமைந்திருக் கிறது பாடல்.

அவனைக் காண முடியவில்லையே என்று பல நாள் வருந்தி இளைஞரும் முதியவர்களும் நல்ல நெற்றியை யுடைய பெண்களும் இன்னும் கண்டு உவக்கும்படி யாக அவன் சுகமே இருக்கிறான். நாழிகைக் கணக்கர் களைக்கூட நாங்கள் உள்ளே விடவில்லை. ஆகையால் நீங்கள் இப்போது பார்க்க இயலாது.

*பலநாள் வருந்தி, இளையரும் முதியரும்*
*நன்னுதல் மகளிரும் இன்னும்கண்டு உவப்ப,*
*யாமங் கொள்வரும் ஒழிய.[2]*

அன்று ஒருநாள் கொல்லுகிற ஆயுதம் குத்திய தாலே குன்று போன்ற மார்பிலே உண்டான விழுப் புண்ணில் நெய்யோடு பஞ்சைச் சேர்த்து வைத்து, பசுமையாக இருக்கிற கரிய கொத்தையுடைய நொச்சி மலரை மதில் காப்பதற்குரிய மலராக அணிந்து,

1. புறத்திரட்டு. 1341. *வீழ்ந்த புரிசை - விரும்பிய மதிலில். ஞாயில் - மதிலின்மேல் உள்ள முடிகள். அங்கிருந்து விடும் அம்பு களால் தூர்ந்த கிடங்கு. கன்று மேய் கிடங்கு. கிடங்கு - அகழி. புரிசையையும் கிடங்கையும் உடைய ஊரில் உள்ள. மல்லல் - வளம்.*

2. *யாமம் கொள்வர் - நாழிகைகளையும் யாமத்தையும் கூறிக் காவல் புரிபவர்.*

கோறுைத வேலையுடைய வீரர் பெருமகன் பாதுகாப்பிலே இருக்கிருன். நீங்கள் இப்போது பார்க்க இயலாது.

...மேல்நாள்
கொல்படை மொய்த்த குன்றுயர் விழுப்புண்
நெய்யிடைப் பஞ்சு சேர்த்திப் பையெனக்
கருங்குரல் நொச்சி மிலைந்த
திருந்துவேல் விடலை காப்புஅமைந் தனனே.[1]

ஔவையாரும் அந்த நிலை குறித்துப் பாடினுர். புண்பட்டுக் கிடக்கும்போது தம்முடைய உரையாடலா லும் பாடலாலும் அந்தப் புலமைப் பெருமாட்டியார் அவனுக்குச் சோர்வு வாராமல் செய்து வந்தார். படைத் தலைவர்கள் அன்றன்று இரவு வந்து போர்க் களத்தில் நிகழ்ந்தனவற்றை யெல்லாம் சொல்லிச் சென்றுர்கள்.

"நாம் பாண்டியனுக்கும் சோழனுக்கும் உதவி வேண்டுமென்று ஓலை அனுப்பினேமே! அவர்கள் வந்து சேரவில்லையே! நான் இங்கே கிடக்கிறேன். இந்தச் சமயத்தில் அவர்கள் துணை கிடைத்தால் எவ்வளவு உதவியாக இருக்கும்!" என்று அதிகமான் கூறினன்.

"அவர்கள் படைகளை ஆயத்தமாக வைத்திருக்க மாட்டார்கள். ஓலை போன பிறகே ஆவன செய்கிருர் கள் போலும்!" என்றுன் ஒரு படைத் தலைவன்.

மறுநாளே பாண்டியன் படை வந்து விட்டது. அதற்கும் மறுநாள் சோழன் படையும் வந்து சேர்ந்து கொண்டது.

---

1. மொய்த்த - பதிந்த. குன்று - குன்று போன்ற மார்பு; உவம ஆகுபெயர். விழுப்புண் - மார்பிலும் முகத்திலும் பட்ட புண். பையென - பசுமையாக. குரல் - பூங்கொத்து. மதிலை முற்றுகை யிடுபவர் உழிஞையையும், அதனை எதிர்த்துக் கோட்டையைக் காப்பவர் நொச்சி மலர் மாலையையும் அணிவது மரபு. காப்பு அமைந்தனன் - மேலும் தீங்கு நேராமல் பாதுகாக்கும் காவலில் பொருந்தி யிருக்கிருன்.

# 15. முடிவு

அதிகமான் புண்பட்டுக் கிடக்கிருன் என்ற செய்தியால் அவன் படையினருக்குச் சிறிது சோர்வு தட்டியது. ஆனால் பகைப் படைகளுக்கோ இரு மடங்கு வீறு உண்டாயிற்று. அத்தகைய சமயத்தில் பாண்டியனும் சோழனும் படைகளுடன் வந்து சேர்ந்தனர்; சேரன் படையைச் சூழ்ந்து கொண் டனர். அதற்கு முதல் நாள் பெருஞ்சேரல் இரும் பொறை, 'இனி இரண்டே நாளில் வெற்றி மகளை நாம் கைப் பிடிப்போம்' என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தான். அதிகமான் போர்க்களத்தில் இரண்டு மூன்று நாட்கள் தோன்ருததால் தகடூர்ப் படையிலே தளர்ச்சி உண்டானதை அறிந்தே, அவ்வாறு எண்ணினன். ஆனால் இப்போது அந்த எண்ணம் சிதறியது. புதிய துணைப்படைகள் மதுரை யிலிருந்தும் உறையூரிலிருந்தும் வந்து விட்டன. 'இந்தப் போரிலே ஏன் தலையிட்டோம்!' என்ற சலிப்புக்கூடச் சிறிது அவன் மனத்தில் நிழலாடியது.

அதைக் குறிப்பாக உணர்ந்த மலையமான் திரு முடிக்காரி அவனுக்குப் புது முறுக்கு ஏற்றவேண்டு மென்பதைத் தெளிந்தான். "மன்னர்பிரான் இப் போதுதான் தம்முடைய வீரத்தையும் மிடுக்கையும் காட்ட வேண்டும். அன்று அதிகமான் உயிரை என் வேல் குடித்திருக்கவேண்டும். மயிரிழை தப்பியது; புண்படுத்தியதோடு நின்றது. ஆனால் என்ன? இனி அவன் போர் முனைக்கு வந்து போர் செய்வான் என்று நான் நினைக்கவில்லை. கோட்டைக்குள் இருந்தபடியே போரை இப்படி இப்படி நடத்த வேண்டும் என்று கட்டளை பிறப்பித்துக் கொண்டிருப் பான். ஒருகால் மீண்டும் போர்க் களத்துக்கு

வந்தாலும் பழையபடி போர் செய்ய இயலாது. ஓட்டைப் படகு ஆற்றைக் கடக்குமா?" என்று சொல்லி எழச் செய்தான்.

போர் இப்போது முழு வீறுடன் தொடர்ந்தது. அதிகமானும் புதிய ஊக்கத்தோடு புறப்பட்டான். இருபெரும் படைகள் தனக்குத் துணையாக வந்த பிறகு என்ன குறை? "இதோ இரண்டு மூன்று நாட்களில் சேரர் படையை முதுகிட்டு ஓடச் செய்கி றேன்" என்று கனன்று எழுந்தான். சிங்கக்குட்டி சோம்பு முரித்து எழுந்ததுபோல அவன் மீண்டும் போர்க்களத்தில் வந்து குதித்தான். துணைப் படை யின் வரவும் அதிகமான் தோற்றமும் அவனுடைய படை வீரர்களுடைய தளர்வை இருந்த இடம் தெரியாமல் ஓட்டிவிட்டன. பழையபடி வீறு கொண்டு எழுந்தனர். அன்றைப் போரில் எதிர்க் கட்சியில் ஒரு தலைவன் மண்ணைக் கவ்வினான்.

அந்தச் செய்தி காரியின் உள்ளத்திலே வேத னையை உண்டாக்கியது. சுளீர் என்று சாட்டை கொண்டு அடித்தால் குதிரைக்கு வலிக்கத்தான் வலிக்கும். அப்படித்தான் அவன் உள்ளத்தில் வலித்தது. ஆனால் அந்த அடியைப் பெற்ற குதிரை நாலு கால் பாய்ச்சலிலே பாயத் தொடங்கும். காரியும் அப்படியே பாயத் தீர்மானித்தான். அன்று இரவு சேரமான் முன்னிலையில் படைத் தலைவர்களையெல்லாம் கூட்டி இன்ன இன்னபடி போர் செய்ய வேண்டும் என்று வரையறை செய் தான். "இன்னும் இரண்டு மூன்று நாட்களில் இந்தப் போருக்கு ஒரு முடிவு காணவேண்டும். சோழ பாண்டியர்களின் படையைக் கண்டு அஞ்ச வேண்டியது இல்லை. வெறும் எண்ணிக்கையினால் வீரம் விளங்காது. ஆயிரம் எலிகள் வந்தாலும் ஒரு நாகத்தின் மூச்சுக்கு முன்னே நிற்க இயலாது. போர் நீண்டுகொண்டு போனால் இன்னும் யாராவது

அவர்களுக்குத் துணை வந்துகொண்டே இருப்பார்கள். வெற்றி கிட்டாமல் செல்லும் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றுகிறது எனக்கு'' என்று அவன் யாவரையும் உணர்ச்சியும் துடிதுடிப்பும் கொள்ளும்படி தூண்டினான்; அவனுடைய பேச்சினால் நல்ல பயன் உண்டாயிற்று.

மறுநாள் போர் முனையிலே சேரன் படை புதிய முறைகளை மேற்கொண்டு போர் செய்தது. பிற படை தம்மை வளைக்காத வகையில் அணி வகுத்துக்கொண்டார்கள். அன்று நடந்த கடும் போரிலே பாண்டியர் படைத் தலைவன் பட்டான்; அதற்குமேல் அந்தப் படைக்குப் போரில் ஊக்கம் இல்லை; கடனுக்கே போர் செய்தது. இரண்டே நாளில் தகடூர் வீரர்கள் கலகலத்துப் போனார்கள். மூன்றாவது நாள் அதிகமான் படையின் முன்னணியில் வந்து நின்றான். பாண்டியனும் சோழனும் இடையிலே நின்றார்கள். காரி அந்தப் படையின் பின்னிருந்து தாக்கும்படி ஒரு படையை அனுப்பினான். அதற்குத் தலைமை தாங்கினான் பிட்டங் கொற்றன். முன்னே தானே நின்று படையைச் செலுத்தினான். சேரமான் படையின் நடுவே நின்றான். அன்று எப்படியாவது போருக்கு ஒரு முடிவைக் கண்டுவிடுவதென்று உறுதி பூண்டு மேலே மேலே முன்னேறினான் மலையமான். சோழனைப் பின்னிருந்து வந்த படை தாக்கியது. அவன் முடி குலைந்தான். அதே சமயத்தில் மலையமான் கை வேலோடு அதிகமானுடைய பட்டத்து யானையைக் குத்தினான். அதனால் மானம் மிக்க அதிகமான் தன் வேலை ஓங்கிக்கொண்டு வந்தான். அந்தச் சமயம் பார்த்துச் சேரர் படையில் இருந்த ஒரு சிறிய தலைவன் தன் வேலை அவன் மார்பில் ஓச்சினான். அது அவன் மார்பிலே நன்றாக ஆழச் சென்றது. அதிகமான் வீழ்ந்தான்; அக் கணத்திலே

உயிர் துறந்தான். தலை அற்ற பிறகு வால் துடிக்கும்; சிறிது நேரம் துடித்து ஓய்ந்துவிடும். அதிகமான் படையும் அப்படித்தான் வீராவேசத்தோடு எதிர்த்து ஓய்ந்தது. எஞ்சியவர்கள் சரணடைந்தார்கள். பாண்டியனும் சோழனும் பெற்றோம் பிழைத்தோமென்று தம் தம் நகரை நோக்கி ஓடிவிட்டார்கள்.

இங்கே போர்க்களத்தில் பட்டத்து யானைக்கு அருகில் அதிகமான் வீழ்ந்து கிடந்தான். அவனைச் சுற்றித் துயரே வடிவாகப் பலர் இருந்தனர். பெருஞ் சேரல் இரும்பொறை அங்கு வந்து பார்த்தான். வெற்றியேந்திய தடந்தோளும் வீரம் விரிந்த திருமார்பும் முறுவல் கோணு மலர் முகமும் முழந்தாளளவும் நீண்ட கைகளும் அசையாமல் கிடந்தன. அதிகமான் திருமேனியைக் கண்ட கண்களில் நீர் துளித்தது. 'எவ்வளவு பெரிய வீரன்!' என்ற வியப்புணர்ச்சி அவன் உள்ளே கிளுகிளுத்தது. உரிமை மாதர் புலம்பினர். வீரர்கள் கண் பொத்தி வாய் புதைத்து ஊதுலைக் கனல் போல் உயிர்த்தனர்.

புலவர்கள் வந்து பார்த்தார்கள். ஔவையார் ஓடிவந்தார். "அந்தோ! என் தம்பி! என்னைத் தமக்கையென்று வாயாரச் சொல்லி மகிழும் உன் அன்புச் சொல்லை இனி நான் எப்போது கேட்பேன்! உண்டால் நீண்டநாள் வாழலாமென்பது தெரிந்தும் உனக்கு அந்த வாழ்வு வேண்டாமென்று நெல்லிக்கனியை என்னிடம் அளித்த உன் திருக்கையை யாரிடம் இனிப் பார்க்கப்போகிறேன். பிறந்த ஊரையும் பார்த்த ஊரையும் பழகிய நாட்டையும் மறந்து, உன்னோடே வாழ்நாள் முழுவதும் இங்கே இருந்துவிடலாம் என்றல்லவோ எண்ணியிருந்தேன்? அந்த எண்ணத்தில் மண் விழுந்ததே!" என்று புலம்பினர்.

சேரமானுக்கு வேண்டியவரும் அவனைப் பல பாடல்களால்புகழ்ந்தவருமாகிய அரிசில்கிழார்வந்தார்.

அதிகமான் புகழை நன்றாக அறிந்தவர் அவர். புலவர் களில் அவனைத் தெரியாதவர் யார்? பெரிய மன்னனை இத்தனை காலம் அலைக்கழித்து, போர் எப்படி முடியுமோ என்று அஞ்சச் செய்து எதிர்த்து நின்ற அவன் வீரத்தைப் பகைப் படைத் தலைவர்கள் நன்கு அறிந் தார்கள். அவர்கள் வாயிலாக அவனுடைய வீரத்தை அறிந்தவர் அரிசில்கிழார். அவர் இரங்கினார். பிறகு அவனைப்பற்றி ஒரு பாட்டுப் பாடினார். அவனைப்பற்றி அறிந்தவற்றையெல்லாம் அந்தப் பாடலில் அமைத் திருந்தார்.

''அதிகமானுடைய நாட்டில் யாருக்கும் எதனாலும் அச்சமே இல்லாமல் இருந்தது. காடுகளில் மாட்டு மந்தைகள் கன்றுகளோடு தங்கும். யாரும் அவற்றை அடித்துச் செல்லமாட்டார்கள். கவலையில்லாமல் அவை புல்லைத் தின்று இன்புறும். நெடு வழியிலே போகும் அயலூரார் எங்கே வேண்டுமானாலும் தங்கலாம். வழிப் பறிக்காரர்கள் வருவார்களோ என்று சிறிதும் அஞ்ச வேண்டுவதில்லை. நெற்களங்களில் நெல் குவியல் குவியலாகக் காவலே இல்லாமல் போட்டது போட்ட படியே கிடக்கும்; ஒரு துரும்புகூடக் களவு போகாது. மக்களுக்குப் பகைவரே யாரும் இல்லை. இப்படித் தன் நாட்டில் அமைதியும் நற்பண்பும் நிலவும்படி செங் கோலோச்சினான் அதிகமான். உலகமே அவனைப் புகழ்கிறது. வீரத்தில் குறைந்தவனா? அவன் வாள் தன் குறியிலே சிறிதும் தப்பாது. இத்தகைய குரிசில் இப்போது களத்தில் கிடக்கிறான். தாயைப் பிரிந்த குழந்தையைப்போலச் சுற்றத்தார் மூலைக்கு மூலை வருந்திப் புலம்ப, அவனைக் காணாமல் இனிப் பசி வந்து வருத்துமே என்று அஞ்சும் மக்கட் கூட்டம் புலம்பும். அப்படித் துன்புற்று வைகும் உலகம் இழந் ததைவிட, அறம் இல்லாத கூற்றுவனே, நீ இழந்தது தான் மிகப் பெரிது. விதைத்துப் பயிரிட்டு விளைவு

செய்யும் வயலின் பெருமையை அறியாமல் வீழுங் குடியை உடைய உழவன் விதை நெல்லையே சமைத்து உண்டதுபோல நீ செய்து விட்டாயே! இந்த ஒருவனுடைய ஆருயிரை நீ உண்ணுமல் இருந்திருந்தாயாஞல் அவன் அமர் செய்யும் களத்தில் அவன் கொன்று குவிக்கும் பகைவர்களுடைய உயிரைப் பருகி நிறைவு பெற்றிருப்பாயே!''[1] என்ற பொருளை அப் பாட்டுப் புலப்படுத்தியது.

பிறர் துயர் கூர்ந்து இனைய இனைய ஔவையாரின் உள்ளம் வெடிப்பது போலாயிற்று. அதிகமானேடு பழகிய நாட்களெல்லாம் அவருடைய நினைவுக்கு வந்தன.

''அவனுடைய ஈகையை என்னவென்று சொல்வேன்! சிறிதளவு பானம் பெற்ருல், தான் அருந்தாமல் எங்களுக்குக் கொடுத்துவிடுவான். நிறையக் கிடைத்தால் யாம் பாடும்படி எல்லாரோடும் அருந்தி இன்புறுவான். சிற்றுண்டி உண்டாலும் உடன் இருக்கும் பலருக்கும் இலை போட்டு அவர்களோடு உண்பான். பெரிய விருந்தானலும் எல்லோரையும் உண்பித்துத் தான் உண்பான். சுவையான உணவு கிடைக்கும் இடங்களிலெல்லாம் எங்களை இருக்கச் செய்வான். அம்பும் வேலும் நுழையும் இடங்களிலெல்லாம் தான் வந்து முன்னே நிற்பான். எவ்வளவு அன்பாக எங்கள் தலையைக்கோதி மகிழ்வான்! அவனுடைய மார்பிலே புகுந்து தங்கிய வேல் அவன் மார்பையா துளைத்தது? அருமையான சிறப்பைப் பெற்ற பெரிய பாணருடைய கைப் பாத்திரங்களைத் துளைத்தது; இரப்பவர் கைகளைத் துளைத்துவிட்டது; அவனல் காப்பாற்றப்பட்டவர்களுடைய கண் ஒளியை மழுங்கச் செய்தது; கடைசியில், அழகிய சொற்களையும் நுட்பமான ஆராய்ச்சியையும் உடைய புலவர்களுடைய நாவிலே போய்க் குத்தி விழுந்தது. என் அப்பன் இப்போது எங்கே

1. புறநானூறு, 230.

போய்விட்டானே? இனிமேல் பாடுபவர்களும் இல்லை; பாடுபவர்களுக்கு ஒன்றைக் கொடுப்பவர்களும் இல்லை. குளிர்ந்த நீர்த் துறையில் படர்ந்திருக்கும் பகன்றைக் கொடியின் பெரிய பூ யாராலும் அணியப்படாமல் வீணே அழிவதைப்போல, பிறருக்கு ஒன்றும் கொடுக்காமல் வாழ்ந்து அழியும் உயிர்களே அதிகமாக உள்ளன"[1] என்று பாடினார். அந்தப் பாட்டைக் கேட்டுப் பலர் கண்ணீர் உகுத்தனர்.

அதிகமானுடைய மைந்தன் வந்தான். உறவினர் வந்தனர். அவ்வள்ளலுக்குரிய ஈமக் கடனைச் செய்யத் தொடங்கினர். விறகுகளை அடுக்கி அதிகமானுடைய பொன் மேனியை அவ்வீமப் படுக்கையில் இட்டு அவன் மைந்தன் எரியூட்டினான். நெய் விட்டு மூட்டிய ஈம அழல் வானுற ஓங்கி எரிந்தது.

"ஐயோ, இந்த அருமையுடல் நீறுகின்றதே!" என்று ஒருவர் இரங்கினார்.

ஔவையார் தம் கண்ணைத் துடைத்துக் கொண்டார். "அவன் உடல் ஈம எரியிலே நீறானால் என்ன? வானுற நீண்டு வளர்ந்தால் என்ன? இனி அந்த உடம்பைப் பற்றிய கவலை நமக்கு வேண்டியதில்லை. திங்களைப்போன்ற வெண் குடையின் கீழ்க் கதிரவனைப் போல ஒளிவிட்டு வாழ்ந்த அவன் புகழுடம்பு என்றும் மாயாது; அதை யாராலும் அழிக்க முடியாது"[2] என்று பாடினார்.

பிறகு பழங்கால வழக்கப்படி அவனை எரித்த இடத்தில் அவன் பெயரும் பீடும் எழுதிய கல்லை நட்டார்கள். அதற்கு மயிற்பீலியைச் சூட்டினார்கள். வடிகட்டிய கள்ளைச் சிறிய கலத்தால் உகுத்து வழிபட்டார்கள். அதைப் பார்த்த ஔவையாருக்குக் கங்கு கரையில்லாத துயரம் பெருக்கெடுத்தது. "அதிகமானுக்கா இது? இதை அவன் பெற்றுக் கொள்கிறானே?

1. புறநானூறு, 235. 2. புறநானூறு, 231.

உயர்ந்த கொடுமுடிகளையுடைய மலை பொருந்திய நாட்டை நீ கொள்க என்று கொடுத்தாலும் வாங்க இசையாத அந்தப் பெருவள்ளல் இந்தச் சிறிய கலத்தில் உகுக்கும் கள்ளைக் கொள்வானா? இதைப்பார்க்கும் படியாக நேர்ந்த எனக்குக் காலையும் மாலையும் இல்லையாகட்டும்; வாழும் நாளும் இல்லாமற் போகட்டும்!"[1] என்று விம்மினார்.

வீரத்தாலும் ஈகையாலும் பண்பினாலும் ஓங்கி உயர்ந்த ஒரு பெரிய வள்ளலின் வாழ்க்கை, ஒரு சிறந்த வீரனின் நாள், ஓர் இணையற்ற கருணையாளனது கதை முடிந்தது. அவனுடைய புகழைத் தமிழுலகம் மறக்கவில்லை; ஏழு வள்ளல்களில் ஒருவனாக வைத்துப் பாராட்டுகிறது.

அதிகமானுக்குப் பிறகு அவன் மகன் பொகுட்டெழினி தகடூரை ஆண்டான். கொல்லிக் கூற்றத்தைச் சேரமான் தகடூர்ப் போரில் பெருவிறலோடு நின்று போரிட்ட பிட்டங் கொற்றனுக்கு உரிமை யாக்கினான். திருக்கோவலூரை மீண்டும் காரிக்கே வழங்கினான்.

சில காலம் ஔவையார் பொகுட்டெழினியுடன் இருந்து, பிறகு புறப்பட்டு விட்டார். அதிகமான் இல்லாத இடத்தில் தங்கி வாழ அவர் மனம் இடம் கொடுக்கவில்லை.

அதிகமானுடைய பரம்பரையில் வந்தவர்கள் பிற்காலத்தில் சில திருக் கோயில்களில் திருப்பணி செய்ததாகத் தெரிகிறது. கொங்கு நாட்டில் உள்ள நாமக்கல் என்னும் ஊரில் ஒரு சிறு குன்றம் இருக்கிறது. அங்கே உள்ள திருமால் கோயிலுக்கு அதியரைய விண்ணகரம் என்று பெயர். அதை அதியேந்திர விஷ்ணுக்கிருகம் என்று வடமொழியில் வழங்குவர். அதனை நிறுவியவர் அதிகமான் பரம்பரையில் வந்தவரென்றே தெரிகிறது. அப்பர் அடிகள் திருவருள்

1. புறநானூறு, 232.

பெற்ற திருத்தலம் திருவதிகை என்பது. அதிகை என்பது அதியரைய மங்கை என்பதன் மரூஉ. தஞ்சாவூர் தஞ்சை என்று வருவது போன்றது அது. அந்தத் தலமும் அதிகமான் வழிவந்த மன்னர் ஒருவரால் அமைக்கப் பெற்றது போலும். பதின்மூன்ருவது நூற்ருண்டில் அதிகமான் மரபில் வந்த விடுகாதழகிய பெருமாள் என்பவன் ஒரு மலையின்மேல் அருகக் கடவுள் திருவுருவை நிறுவினுனென்று ஒரு கல் வெட்டிலிருந்து தெரிய வருகிறது.

இன்று தகடூராகிய தருமபுரி தன் பெயரைஇழந்து நின்ருலும் அதிகமான் கோட்டை இருந்த இடம் மேடாக இருக்கிறது. அங்கே அதிகமான் கோட்டை என்ற பெயரோடு ஓர் ஊர் உள்ளது. அங்கே ஓரிடத்தில் சாலையின் ஓரத்தில் ஒரு சிலையுருவம் நிற்கிறது. அதைக் கோட்டைக்குள்ளே புகும் சுருங்கையைச் சேரமானுக்குக் காட்டிக் கொடுத்த வஞ்ச மகளுடைய உருவம் என்று அங்குள்ள மக்கள் சொல்கிருர்கள்.

அதிகமான் ஒளவையாரிடம் கொண்ட அன்பு பாசமாக மாறியது. அவ்விருவரும் தம்பி தமக்கைகளைப் போலப் பழகினர். அதனுல் பிற்காலத்தில் அவர்கள் ஒரு தாய் வயிற்றிலே பிறந்தவர்கள் என்று கூடச் சிலர் பாடி விட்டார்கள்.

அதிகமான் வரலாறு ஒரு வீர காவியம்; புலவர்கள் போற்றும் புனிதக் கதை.

---

## கட்டுரைப் பயிற்சி

கீழ்க்காணும் பொருள்கள் பற்றி ஒன்றரைப் பக்க அளவில் கட்டுரைகள் வரைக.

1. அதியர் குல முன்னோர்கள்.
2. அதிகமான் ஆண்மையும் ஆட்சியும்.

3. அதிகமான் ஔவையார் நட்பு.
4. அதிகமானும் பெருஞ்சித்திரனாரும்.
5. அதிகமான் பெற்ற அமுதக் கனி.
6. அதிகமான் புகழும் ஔவையார் பாடலும்.
7. அதிகமானும் தொண்டைமானும்.
8. கோவலூர்ப் போரும் குமரன் பிறப்பும்.
9. பெருஞ்சேரல் இரும்பொறையும் தகடூர் முற்றுகையும்.
10. அந்தப்புர நிகழ்ச்சியும் வஞ்சமகள் செயலும்.
11. போரும் முடிவும்.
12. அதிகமானைப் பாடிய அருந்தமிழ்ப்புலவர்கள்.